"ஸ்ரீ சங்கர க்ருபா அநுபந்தம்"

21-5

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு.

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला-११








# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

11

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–११



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா
# 11

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்

1963



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

21-5

## பதிப்புரை

ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி ஸ்ரீ மஹாஸந்நிதானம் அவர்களின் பரமானுக்ரஹத்தால் ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலையில் 11-வது மலர் பூர்த்தியாகியுள்ளது.

**ப்ரபோதஸுதாகரம் :**

19 ப்ரகரணங்களுடன்கூடிய ப்ரபோத ஸுதாகரத்தில் முதல் 15 ப்ரகரணங்கள் 10-வது மலரில் வெளியாகியுள்ளன. மீதி நான்கு ப்ரகரணங்களும் இதில் வந்துள்ளன. ஆத்ம ஞானத்திற்கு அந்தரங்க ஸாதனமான பக்தியையும், அதன் பிரிவுகளான ஸ்தூல-ஸூக்ஷ்ம பக்திகளுக்கு உபாயங்களையும் 16வதில் கூறி, 17வதில் பக்தர்கள் தியானிப்பதற்கு மிக அழகாக கிருஷ்ண ஸ்வரூபத்தை வர்ணித்து விட்டு 18வதில் நிர்குணமும் (உபநிஷத்துகளில் கூறப்பட்ட ஸச்சிதானந்த ப்ரஹ்மமும்) ஸகுணமும் (கிருஷ்ண ஸ்வரூபமும்) ஒன்றுதான் என்பதை பல காரணங்களால் காட்டி, 19வதில் பாகவதத்தில் கூறியுள்ள கிருஷ்ணனுடைய பல லீலைகளையும் திவ்ய மஹிமைகளையும் கூறி, அவரையே சரணமடையவேண்டுமென்று உபதேசிக்கிறார். கிருஷ்ண லீலைகளில் எழுந்துள்ள ஆக்ஷேபங்களைக் கூறி அதற்கு ஸமாதானமும் கூறுகிறார். இந்நூலின் மூலம் படிப்பவர்களை விஷ்ணு பக்தர்களில் சிறந்தவர்களாக ஆக்குகிறார் பகவத்பாதர்.

பஜகோவிந்தம் :— பக்திக்கும் ஞானத்திற்கும் இடையூறாக உள்ள சரீராதிகளில் நாம் கொண்டுள்ள அபிமானம் நீங்கி வைராக்கியம் நிலைப்பட விஷயங்களின் தன்மையை வெகு அழகாக எடுத்துக் காட்டுகிறார். சாஸ்திரசர்ச்சைகளிலேயே தம் வாழ்நாட்களைக் கழிப்பவனுக்கு பக்தியை உபதேசிக்கிறார். அத்வைத வாதியான தன்னிடம் கோபம் கொண்டுள்ள ஓர் வைஷ்ணவனுக்கு, தன்னிடமும் விஷ்ணு இருப்பதாகக் கூறி ஸமரஸ பாவத்தை உபதேசிக்கிறார். குரு பக்தியினால் பகவானைக் காணலாம் என்று கூறி

முடிக்கிறார். பொருளுணர்ந்து இசையுடன் இதைப் பாடினாலேயே வைராக்கியமும் பக்தியும் உண்டாகும்.

ஷட்பதீ ஸ்தோத்திரம் :— இதில் ஏழாவது சுலோகத்தில் "ஷட்பதீ" என்ற பதம் வருவதால் 'ஷட்பதீ ஸ்தோத்திரம்' என்றே இதற்குப்பெயர் அமைந்துள்ளது. முதல் ஆறு சுலோகங்களால் பிரார்த்தனை செய்து ஏழாவதில் சரணமடைகிறார். ஆறு சுலோகங்கள் கொண்டிருப்பதாலும் இதற்கு 'ஷட்பதீ' என்று பெயர் வந்துள்ளது. ஷட்பதீ என்பது வண்டுக்குப்பெயர். வண்டு தாமரைப்பூவில் மொய்ப்பதுபோல் கடைசி சுலோகத்தில் காட்டப்பட்ட ஆறு பதங்களுடன் கூடிய ஷட்பதீ மந்திரத்தை என் நாக்கு எப்பொழுதும் சொல்லிக்கொண்டிருக்கட்டும் என்று முடிக்கிறார்.

ஸ்ரீ கிருஷ்ணாஷ்டகம் :— கிருஷ்ணனை உபநிஷத்துக்களில் கூறப்பட்டபடி ஸச்சிதானந்த வஸ்துவாகவும், ஸகுண ஈசுவரனாகவும் அவதார மூர்த்தியாகவும் வர்ணித்து அவர் என் கண் முன் தோன்றட்டும் என்று பிரார்த்திக்கிறார். கிருஷ்ணவிக்ரஹம் நேத்ரத்திற்கும், அவருடைய பரதத்வம் ஞானத்திற்கும் விஷயமாகி ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட பிரார்த்திக்கிறார்.

மிகவும் சிறப்பாக இம்மலர் வெளியாகும்படி அருள் செய்த சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குருவின் திருவடித் தாமரைகளை வணங்குவோம்.

K. V. சுப்பரத்னம் அய்யர்,
பொதுக்காரியதரிசி,
அகிலபாரத சங்கரஸேவாஸமிதி.


விஷயானுக்ரமணிகை

॥ श्रीः ॥

# ॥ प्रबोधसुधाकरः ॥

# ப்ரபோதஸுதாகரம்

*[இந்நூலில் உள்ள முதல் 15 பிரகரணங்கள் ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலா 10-வது மலரில் வெளியாகியுள்ளன. பக்தியை விவரிக்கும் கடைசி நான்கு பிரகரணங்கள் இந்த 11-வது மலரில் வெளியாகின்றன]*

## १६. द्विधाभक्तिप्रकरणम् ॥

(அ) முக்திக்கு ஸாதனமான வைராக்யம், ஆத்மபோதம், பக்தி இம் மூன்றில் முதலிரண்டையும் 15 ப்ரகரணங்களால் விரிவாகக் காட்டினார். வைராக்யம் இருந்தாலும் ஆத்மஞானம் ஏற்படுவதற்கும், அதனால் ஆனந்தானுபவம் ஏற்படுவதற்கும் முக்ய ஸாதனமான பக்தியைக் கடைசி நான்கு ப்ரகரணங்களில் விரிவாக விளக்குகிறார். இதில் ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என்ற இருவித பக்திகளை உபதேசிக்கிறார் :—

**चित्ते सत्वोत्पत्तौ तटिदिव बोधोदयो भवति ।**
**तर्ह्येव स स्थिरः स्याद्यदि चित्तं शुद्धिमुपयाति ॥ १६६ ॥**

## 16. த்விதா (இரண்டுவித) பக்திப்ரகரணம்

சித்தே ஸத்வோத்பத்தௌ தடிதிவ போதோதயோ பவதி ।
தர்ஹ்யேவ ஸ ஸ்திர: ஸ்யாத் யதி சித்தம் ஶுத்திமுபயாதி॥

**चित्ते**-மனதில், **सत्वोत्पत्तौ**-ஸத்வகுணம் உண்டாகும் பொழுது, **तटित् इव**-மின்னல்போல, **बोधोदयः**-ஞானத்தின் உதயம், **भवति**-ஏற்படுகிறது. **चित्तं**-மனம், **शुद्धिं उपयाति यदि**-சுத்தமான தன்மையை அடையுமாகில், **तर्हि एव**-அப்பொழுதுதான், **सः**-அந்தபோதம், **स्थिरः स्यात्**-நிலைத்ததாக ஆகும்.

சித்தத்தில் ஸத்வகுணம் உண்டாகும்பொழுது மின்னல்போல் ஞானோதயம் ஏற்படுகிறது. அவ்வாறு தோன்றும் ஆன்ம ஒளி சித்தம் தெளிந்து பரிசுத்தமாக இருந்தால்தான் அதில் நிலைத்து நிற்கும். (166)

(அ) சித்த சுத்திக்கு உபாயம் கூறுகிறார்:—

शुद्ध्यति हि नान्तरात्मा कृष्णपदाम्भोजभक्तिमृते ।
वसनमिव क्षारोदैर्भक्त्या प्रक्षाल्यते चेतः ॥ १६७ ॥

ஶுத்யதி ஹி நாந்தராத்மா க்ருஷ்ணபதாம்போஜ
பக்திம்ருதே ।
வஸநமிவ க்ஷாரோதைர் பக்த்யா ப்ரக்ஷால்யதே சேத: ॥

कृष्णपदाम्भोज-ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவினுடைய பாத கமலங்களில், भक्ति ऋते-பக்தியில்லாமல், अन्तरात्मा-சித்தம், न शुद्ध्यति हि-தெளிவடைகிறதில்லையல்லவா ? क्षारोदैः-உவர் மண் கலந்த தண்ணீர்களால், वसनं इव-ஆடை பரிசுத்த மாக்கப்படுவதுபோல, भक्त्या-பக்தியால், चेतः-சித்தம், प्रक्षाल्यते-பரிசுத்தமாக்கப்படுகிறது.

ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவினுடைய பாத கமலங்களில் பக்தி இல்லாவிடில் சித்தம் பரிசுத்தமாக ஆகாது. உப்பு மண் கலந்த தண்ணீரால் ஆடையிலுள்ள அழுக்கு நீங்குவதுபோல பக்தியினால்தான் மனத்திலுள்ள அழுக்கு நீங்குகிறது. (167)

यद्वत्समलादर्शे सुचिरं भस्मादिना शुद्धे ।
प्रतिफलति वक्त्रमुच्चैः शुद्धे चित्ते तथा ज्ञानम् ॥ १६८ ॥

யத்வத் ஸமலாதர்ஶே ஸுசிரம் பஸ்மாதிநா ஶுத்தே ।
ப்ரதிபலதி வக்த்ரமுச்சை: ஶுத்தே சித்தே ததா ஞானம் ॥

समलादर्शे-அழுக்கடைந்த கண்ணாடி, सुचिरं-நீண்ட நேரம், भस्मादिना-சாம்பல் முதலியவற்றால், शुद्धे-பரிசுத்தம் செய்யப்பட்டவுடன் அதில், यद्वत्-எப்படி, वक्त्रं-முகம்,

उच्चैः - நன்ருக, प्रतिफलति -- பிரதிபலிக்கின்றதோ, तथा - அப்படியே, शुद्धे चित्ते-சுத்தமான மனதில், ज्ञानं - ஆத்ம ஞானம், प्रतिफलति - பிரதிபலிக்கின்றது.

கண்ணுடி அழுக்கடைந்திருக்கும்பொழுது முகம் அதில் நன்ருகப் பிரதிபலிக்கிறதில்லே. ஆனல் அக்கண்ணுடியைச் சாம்பல் முதலியவற்ருல் நன்ருகத் துடைத்து மாசற்றதாகச் செய்துவிட்டால் அதில் முகம் நன்கு ப்ரதிபலிக்கிறது. அதுபோல மனதில் ரஜோகுண தமோகுணங்கள் நிறைந்து இருக்கும்பொழுது ஆத்மஞானம் அதில் நன்கு உதயமாவதில்லே. ஆனுல் பக்தி என்ற சாம்பலால் அம்மனதை நன்ருகத் துடைத்து மாசற்றதாகச் செய்துவிட்டால் அதில் ஸத்வகுணம் நிரம்பிவிடுகிறது. அப்பொழுது அதில் ஆத்மஞானம் உண்டாகி நிலேத்து நிற்கின்றது. (168)

**ज्ञानन्तु तत्र बीजं हरिभक्त्या ज्ञानिनो ये स्युः ।**

ஜ்ஞானந்து தத்ர பீஜம் ஹரிபக்த்யா ஞானினோ யே ஸ்யு: ।

ये-எவர்கள், हरिभक्त्या-விஷ்ணுபக்தியாலே, ज्ञानिनः-ஞானிகளாக, स्युः-இருக்கிருர்களோ (அவர்கள்), तत्र-அதில் बीजं-காரணத்தை, जानन्तु-அறிந்துகொள்வார்கள்.

ஞானிகள் அனேவரும் ஹரிபக்தியாலேயே ஞானத்தைப் பெற்று விளங்குகிருர்கள். ஆதலால் விஷ்ணு பக்தி தான் அவர்களுடைய ஞானத்திற்குக் காரணமாகின்றது.

**मूर्तं चैवामूर्तं द्वे एव ब्रह्मणो रूपे ॥ १६९ ॥**

**इत्युपनिषत्तयोर्वा द्वौ भक्तौ भगवदुपदिष्टौ ।**

**क्लेशादक्लेशाद्वा मुक्तिः स्यादेतयोर्मध्ये ॥ १७० ॥**

மூர்த்தம் சைவாமூர்த்தம் த்வே ஏவ ப்ரஹ்மணோ ரூபே ॥

இத்யுபநிஷத் தயோர் வா த்வௌ பக்தௌ பகவதுபதிஷ்டௌ ।

க்லேசாதக்லேசாத் வா முக்தி: ஸ்யாதேதயோர் மத்யே ॥

ब्रह्मणः-பரம்பொருளுக்கு, मूर्तं-உருவமுள்ளது, अमूर्तं चैव-உருவமற்றது (என்று), द्वे एव रूपे-இரண்டே ரூபங்கள் (உண்டு), इति-என்று, उपनिषत्-உபநிஷத்து (கூறுகின்றது) तयोः वा-அந்த இருவகைகளிலும், भगवदुपदिष्टौ-பகவானால் உபதேசிக்கப்பட்ட, भक्तौ-பக்தர்கள், द्वौ-இருவகையினர். एतयोः मध्ये-இந்த இருவகை பக்தர்களில், क्लेशात्-கஷ்டத்தாலோ, वा-அல்லது, अक्लेशात्-கஷ்டமில்லாமலோ, मुक्तिः-முக்தி, स्यात्-உண்டாகிறது.

"द्वे वाव ब्रह्मणो रूपे मूर्तं चैवामूर्तं च" என்று பிருஹதாரண்யக உபநிஷத்தில் ப்ரஹ்மத்திற்கு இரண்டு ரூபங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஒன்று உருவமுள்ளது ஸகுணம். மற்றொன்று உருவமற்றது நிர்க்குணம். இந்த இரண்டு ரூபங்களைக் கொண்டு பக்தர்களை நிர்குணபக்தர், ஸகுண பக்தர் என்று இருவிதமாக பகவான் கீதையில் காட்டியிருக்கிறார். இவ்விருவர்களில் நிர்குணபக்தர்களுக்கு மிகுந்த கிலேசத்தால்தான் முக்தி கிடைக்கும். ஸகுணபக்தர்களுக்கோவெனில் கிலேசமில்லாமலேயே முக்தி கிடைக்கும்.

स्थूला सूक्ष्मा चेति द्वेधा हरिभक्तिरुद्दिष्टा ।
प्रारम्भे स्थूला स्यात्सूक्ष्मा तस्याः सकाशाच्च ॥ १७१ ॥

ஸ்தூலா ஸூக்ஷ்மா சேதி த்வேதா ஹரிபக்திருத்திஷ்டா
ப்ராரம்பே ஸ்தூலா ஸ்யாத் ஸூக்ஷ்மா தஸ்யா:
ஸகாசாச்ச ||

स्थूला-ஸ்தூலமானது, सूक्ष्मा च-ஸூக்ஷ்மமானது, इति-என்று, हरिभक्तिः-விஷ்ணுபக்தி, द्वेधा-இருவகையாக, उद्दिष्टा-கூறப்பட்டுள்ளது. प्रारम्भे-துவக்கத்தில், स्थूला-ஸ்தூல பக்தியும் (பிறகு), तस्याः सकाशात्-அதிலிருந்து, सूक्ष्मा च-ஸூக்ஷ்மமான பக்தியும், स्यात्-உண்டாகும்.

மேலும் இந்த விஷ்ணு பக்தியானது ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என்று இருவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவற்

றுள் ஸ்தூலமான பக்தி முதலில் உண்டாகிறது. பின்னர் அந்த ஸ்தூல பக்தியிலிருந்து ஸூக்ஷ்ம பக்தி காலக்ரமத்தில் உண்டாகிறது. (171)

स्वाश्रमधर्माचरणं कृष्णप्रतिमार्चनोत्सवो नित्यम् ।
विविधोपचारकरणैर्हरिदासैः संगमः शश्वत् ॥ १७२ ॥

कृष्णकथासंश्रवणे महोत्साहः सत्यवादश्च ।
परयुवतौ द्रविणे वा परापवादे पराङ्मुखता ॥ १७३ ॥

ग्राम्यकथासूद्वेगः सुतीर्थगमनेषु तात्पर्यम् ।
यदुपतिकथावियोगे व्यर्थं गतमायुरिति चिन्ता ॥ १७४ ॥

एवं कुर्वति भक्ति कृष्णकथानुग्रहोत्पन्ना ।
समुदेति सूक्ष्मभक्तिर्यस्यां हरिरन्तराविशति ॥ १७५ ॥

ஸ்வாச்ரம தர்மாசரணம் க்ருஷ்ண ப்ரதிமார்ச்சனோத்ஸவோ நித்யம் ।
விவிதோபசாரகரணைர் ஹரிதாஸை: ஸங்கம: ஶஶ்வத் ॥

க்ருஷ்ண கதா ஸம்ஶ்ரவணே மஹோத்ஸாஹ: ஸத்யவாதஶ்ச ।
பர யுவதௌ த்ரவிணே வா பராபவாதே பராங்முகதா ॥

க்ராம்ய கதாஸூத்வேக: ஸுதீர்த்த கமனேஷு தாத்பர்யம் ।
யதுபதிகதா வியோகே வ்யர்த்தம் கதமாயுரிதி சிந்தா ॥

ஏவம் குர்வதி பக்திம் க்ருஷ்ண கதானுக்ரஹோத்பந்நா ।
ஸமுதேதி ஸூக்ஷ்ம பக்திர் யஸ்யாம் ஹரிரந்தராவிஶதி ॥

**स्वाश्रमधर्माचरणं**-தன்னுடைய ஆச்ரமத்திற்குரிய தர்மங்களைச்செய்தல், **नित्यं**-தினந்தோறும், **विविध**-பலவகையான, **उपचार**-உபசாரங்களை, **करणैः**-செய்வதோடு, **कृष्ण**-ஸ்ரீகிருஷ்ணனுடைய, **प्रतिमा**-விக்ரஹத்தை, **अर्चन**-பூஜிப்

பதில், उत्सवः-ஸந்தோஷமடைதல், शश्वत्-அடிக்கடி, हरिदासैः-ஹரிபக்தர்களோடு, संगमः-கூடுதல், कृष्ण-ஸ்ரீகிருஷ்ணனுடைய, कथा-கதையை, संश्रवणे-காது கொடுத்துக் கேட்பதில், महोत्साहः-மிகுந்த உத்ஸாஹம், सत्यवादः च-உண்மை பேசுதல், परयुवतौ-பரஸ்திரீயினிடத்திலும், द्रविणे-பிறர் பொருளிலும், परापवादे वा-பிறரைப்பழித்துப் பேசுவதிலும், पराङ्मुखता-கூடுபடாமலிருத்தல், ग्राम्यकथासु-இழிவான பேச்சுக்களில், उद्वेगः-வெறுப்பு, सुतीर्थगमनेषु-புண்ய தீர்த்தங்களுக்குச் செல்வதில், तात्पर्य-கருத்து, यदुपति-யாதவர்களின் பதியாகிய கண்ணபிரானுடைய, कथावियोगे-கதையைக் கேட்காவிடில், आयुः-வாழ்நாள், व्यर्थ-வீணாக, गतम्-சென்று விட்டதே என்ற, चिन्ता-கவலை, एवं-இம்மாதிரி भक्ति-(ஸ்தூல) பக்தியை, कुर्वति-செய்துகொண்டிருக்கும் பொழுது, कृष्णकथा-ஸ்ரீ கிருஷ்ணனுடைய கதையின், अनुग्रह-அருளால், समुत्पन्ना-உண்டாகும், सूक्ष्मभक्तिः-ஸூக்ஷ்மமான பக்தி, समुदेति-ஏற்படுகிறது यस्यां-எதில், हरिः-விஷ்ணு, अन्तः-உள்ளே, आविशति-நுழைந்து விடுகிறானே.

தன்னுடைய ஆச்ரமத்திற்குரிய கடமைகளைச் செய்தல், தினந்தோறும் பலவித உபசாரங்களுடன் ஸ்ரீ கிருஷ்ணனுடைய விக்ரஹத்திற்கு அர்ச்சனை செய்து சந்தோஷமடைதல், அடிக்கடி விஷ்ணு பக்தர்களுடன் சேர்ந்து கொள்தல், ஸ்ரீ கிருஷ்ணனுடைய கதைகளைக் கேட்பதில் உத்ஸாஹம், உண்மையே பேசுதல், பிறருடைய மனைவி, பொருள், இவற்றிலும் பிறரை இழிவாகப் பேசுவதிலும் விருப்பமில்லாதிருத்தல், உலக வ்யவகாரங்களைக் கண்டு அஞ்சுதல், புண்ய தீர்த்தங்களுக்குச் செல்ல விரும்புதல், யதுபதியான கண்ணபிரானுடைய கதையைக் கேட்காவிடில் தன்னுடைய வாழ்நாளே வீணாகிவிட்டதென்று வருத்தமடைதல், இவைகள் எல்லாம் இருந்தால் ஸ்தூல பக்தி ஏற்பட்டிருப்பதாகச் சொல்லலாம். இவைகளை உறுதியாகச்செய்துகொண்டு ஸ்ரீ கண்ணபிரானுடைய திவ்ய கதாம்ருதத்தை அனவரதம் பருகிவந்தால் அந்த பக்தி

நிலைத்து ஸூக்ஷ்ம பக்தி உண்டாகிறது. அந்த ஸூக்ஷ்ம பக்தி உண்டாகும்பொழுது ஸ்ரீ கண்ணபிரானே இருதய கமலத்தில் புகுந்து வாஸம் செய்ய ஆரம்பித்துவிடுகிறுர்.

(அ) ஸூக்ஷ்ம பக்தியின் லக்ஷணங்களைக் கூறுகிறுர் :—

स्मृतिसत्पुराणवाक्यैर्यथाश्रुतायां हरेर्मूर्तौ ।
मानसपूजाभ्यासो विजननिवासेऽपि तात्पर्यम् ॥ १७६ ॥

ஸ்ம்ருதி ஸத்புராண வாக்யைர்
யதாஶ்ருதாயாம் ஹரேர் மூர்த்தெள ।
மானஸ பூஜாப்யாஸோ விஜந நிவாஸேऽபி தாத்பர்யம் ॥

**स्मृति**–ஸ்மிருதி, **सत्पुराण**–நல்ல புராணங்கள் இவைகளின், **वाक्यैः**–வாக்யங்களால், **यथाश्रुतायां**–உள்ளபடி கேட்கப்பட்ட, **हरेः**-விஷ்ணுவின், **मूर्तौ**-மூர்த்தியில், **मानस-पूजाभ्यासः**–மானஸிகமான பூஜை செய்வதில் பயிற்சி, **विजन-निवासेऽपि**-ஒருவருமற்ற நிர்மானுஷ்யமான இடத்தில் வசிப்பதிலும், **तात्पर्यम्**-எண்ணம் (முதலியன ஸூக்ஷ்ம பக்தியின் அறிகுறியாம்.)

ஸூக்ஷ்ம பக்தியில், ஸ்மிருதிகளாலும் புராணங்களாலும் கூறப்பட்டபடி நாராயணனுடைய ஸ்வரூபத்தை நன்கு கேட்டறிந்து அதனை த்யானம் செய்துகொண்டு மானஸிகமான பூஜையை செய்வதும், மனிதஸஞ்சாரமே இல்லாத தனிமையான இடத்தில் வாஸம் செய்வதில் ஈடுபாடும் ஏற்படுகிறது. (176)

सत्यं समस्तजन्तुषु कृष्णस्यावस्थितेर्ज्ञानम् ।
अद्रोहो भूतगणे ततस्तु भूतानुकम्पा स्यात् ॥ १७७ ॥

ஸத்யம் ஸமஸ்த ஜந்துஷு க்ருஷ்ணஸ்யாவஸ்திதேர்
ஞானம் ।
அத்ரோஹோ பூதகணே ததஸ்து பூதானுகம்பா ஸ்யாத் ॥

**समस्तजन्तुषु**-எல்லா பிராணிகளிடத்திலும், **कृष्णस्य**-கண்ணபிரானுடைய, **अवस्थितेः**-இருப்பின், **सत्यं**-உண்மையான, **ज्ञानं**-அறிவும், **भूतगणे**-பிராணிவர்க்கத்தினிடத்தில், **अद्रोहः**-வெறுப்பின்மையும் (உண்டாகிறது), **ततस्तु**-பின்னர், **भूतानुकम्पा**-பிராணிகளிடத்தில் கருணையும், **स्यात्**-உண்டாகும்.

மேலும் எல்லா உயிர்களிலும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா விளங்குகிறான் என்ற உண்மையான ஞானம் உண்டாகிறது. அதனால் ஒரு பிராணியையும் இம்சிக்கக்கூடாது என்ற எண்ணமும், பிறர் துன்புறுவதைக் கண்டு இரக்கமும் ஏற்படுகிறது. (177)

प्रमितयदृच्छालाभे संतुष्टिर्दारपुत्रादौ ।
ममताशून्यत्वमतो निरहङ्कारत्वमक्रोधः ॥ १७८ ॥

ப்ரமித யத்ருச்சா லாபே ஸந்துஷ்டிர் தார புத்ராதௌ ।
மமதா ஶூந்யத்வமதோ நிரஹங்காரத்வமக்ரோதஃ ॥

**प्रमितयदृच्छालाभे**-தைவவசமாக சிறிதளவு கிடைத்தாலும், **सन्तुष्टिः**-திருப்தி, **दारपुत्रादौ**-மனைவி மக்கள் முதலியவர்களிடத்தில், **ममताशून्यत्वं**-தன்னைச் சேர்ந்தவர்கள் என்ற அபிமானமில்லாமை, **अतः**-அதனால், **निरहङ्कारत्वं**-நான் என்ற அகந்தையில்லாமை, **अक्रोधः**-கோபமின்மை (முதலியவைகளும் உண்டாகின்றன.)

யதிருச்சையாகச் சிறிதளவு பொருள் கிடைத்தால்கூட மகிழ்ச்சியுண்டாகிறது. மனைவி மக்கள் முதலியவர்களிடத்திலுள்ள பற்று நீங்குகின்றது. அதாவது மமதை என்பது போய்விடுகின்றது. பின்னர் நான் என்ற அகந்தையும் அற்றுப்போய்விடுகின்றது. அதனால் ஸூக்ஷ்மபக்தி உள்ளவன் சினமற்றவனாக ஆகிவிடுகிறான். (178)

मृदुभाषिता प्रसादो निजनिन्दायां स्तुतौ समता ।
सुखदुःखशीतलोष्णद्वन्द्वसहिष्णुत्वमापदो न भयम् ॥ १७९ ॥

ம்ருது பாஷிதா ப்ரஸாதோ நிஜ நிந்தாயாம்
ஸ்துதௌ ஸமதா ।
ஸுக துக்க ஶீதலோஷ்ண த்வந்த்வ ஸஹிஷ்ணுத்வ
மாபதோ ந பயம் ॥

**मृदुभाषिता**-இனிமையாகப் பேசும் தன்மை, **प्रसादः**-மனத் தெளிவு, **निजनिन्दायां**-தன்னைப்பற்றிய இகழ்ச்சியிலும், **स्तुतौ**-துதியிலும், **समता**-ஸமமான நிலைமை, **सुख**-இன்பம், **दुःख**-துன்பம், **शीतल**-குளிர், **उष्ण**-வெப்பம் என்ற, **द्वन्द्व**-ஜோடிகளை, **सहिष्णुत्वं**-பொறுத்துக்கொள்ளும் தன்மை, **आपदः**-ஆபத்தினிடம், **न भयम्**-அச்சமின்மை (என்பவைகளும் ஸூக்ஷ்ம பக்தி செய்கின்றவனுக்கு ஏற்படுகின்றன.)

இனிய சொல் கூறுதல், மனமலர்ச்சி, பிறர் தன்னை நிந்தித்தாலும் துதித்தாலும் மனதிற்கு ஒரே நிலைமை, சுகம் துக்கம் சீதம் உஷ்ணம் என்ற த்வந்த்வங்களை ஸகித்துக் கொள்ளுதல், ஆபத்திற்கு அஞ்சாமை என்பவைகளும் ஸூக்ஷ்மபக்தி செய்கின்றவனுக்கு ஏற்படுகின்றன. (179)

**निद्राहारविहारेष्वनादरः संगराहित्यम् ।**
**वचने चानवकाशः कृष्णस्मरणेन शाश्वती शान्तिः ॥ १८० ॥**

நித்ராஹார விஹாரேஷ்வநாதர: ஸங்க ராஹித்யம் ।
வசனே சாநவகாஶ: க்ருஷ்ண ஸ்மரணேன
ஶாஶ்வதீ ஶாந்தி: ॥

**निद्रा**-தூக்கம், **आहार**-உணவு, **विहारेषु**-விளையாட்டு இவைகளில், **अनादरः**-பற்றின்மை, **संगराहित्यम्**-ஜனங்களுடன் சேராமல் இருத்தல், **वचने**-பேச்சில், **अनवकाशः**-அவகாசமில்லாதிருத்தல், **कृष्णस्मरणेन**-ஸ்ரீ கிருஷ்ணனை தியானம் செய்வதால், **शाश्वती**-சாசுவதமான, **शान्तिः**-அமைதி (முதலியவைகளும் ஸூக்ஷ்ம பக்தியால் உண்டாகின்றன.)

தூக்கம், போஜனம், கேளிக்கை முதலியவைகளில் பற்றின்மை, ஜனங்களின் ஸஹவாஸத்தை விலக்குதல்,

அதிகப் பேச்சுக்கு இடம் கொடுக்காமலிருத்தல், ஸ்ரீ கிருஷ்ணனைத் த்யானம் செய்வதால் மனதிற்கு அமைதி முதலியவைகளும் ஸூக்ஷ்ம பக்தி செய்கின்றவனுக்கு ஏற்படுகின்றன. (180)

केनापि गीयमाने हरिगीते वेणुनादे वा ।
आनन्दाविर्भावो युगपत्स्याद्दृष्टसात्त्विकोद्रेकः ॥ १८१ ॥

கேநாபி கீயமாநே ஹரிகீதே வேணுநாதே வா ।
ஆனந்தாவிர்பாவோ யுகபத் ஸ்யாத்த்ருஷ்ட-
ஸாத்விகோத்ரேக: ॥

केनापि-யாராலாவது, गीयमाने-பாடப்படுகின்ற, हरिगीते-ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாட்டிலாவது, वेणुनादे वा-குழலின் ஓசையிலாவது, आनन्दाविर्भावः-ஆனந்தத்தின் தோற்றம் स्यात्-ஏற்படும். युगपत्-அதேசமயத்தில், दृष्टसात्त्विकोद्रेकः-மெய்சிலிர்த்தல் முதலிய ஸாத்விக பாவங்களின் தோற்றமும் (உண்டாகும்)

ஸூக்ஷ்மபக்தி செய்கிறவனுக்கு யாராவது ஒருவன் ஸ்ரீ கிருஷ்ணனைப்பற்றிப் பாடும்பொழுதும், குழல் வாசிக்கும் பொழுதும் அதனைக் கேட்டு ஆனந்தமும் மெய் சிலிர்த்தல் ஆனந்தக் கண்ணீர் பெருகுதல் முதலியனவும் அதே சமயத்தில் ஏற்படுகின்றன. (181)

तस्मिन्ननुभवति मनः प्रगृह्यमाणं परात्मसुखम् ।
स्थिरतां याते तस्मिन्याति मदोन्मत्तदन्तिदशाम् ॥ १८२ ॥

தஸ்மிந்நனுபவதி மன: ப்ரக்ருஹ்யமாணம் பராத்ம ஸுகம் ।
ஸ்திரதாம் யாதே தஸ்மிந் யாதி மதோன்மத்த தந்திதஶாம்॥

तस्मिन्-அவன், परात्मसुखं-பரமாத்ம ஸுகத்தை, अनुभवति-அனுபவிக்கும்பொழுது, मनः-மனம், प्रगृह्यमाणं-கட்டுப்படுவதாக ஆகிறது. तस्मिन्-அம்மனம், स्थिरतां-நிலைபெற்ற தன்மையை, याते-அடைந்துவிட்டால், मदोन्मत्तदन्तिदशां-மதம் பிடித்த யானையின் நிலைமையை, याति-அடைகிறான்.

இவ்வாறு லௌகிக ஸுகத்தைவிட்டு பரமாத்ம ஸுகத்தை அநுபவிக்க ஆரம்பித்து விட்டால் மனம் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கி அசைவற்று விடும். அப்பொழுது இவன் தன்னையும் உலகையும் மறந்து ஆனந்தாதிசயத்தால் மதம் பிடித்த யானை போல் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பான். (182)

(அ) உண்மை பக்தனின் லக்ஷணம் கூறுகிறார்:

जन्तुषु भगवद्भावं भगवति भूतानि पश्यति क्रमशः ।
एतादृशी दशा चेत्तदैव हरिदासवर्यः स्यात् ॥ १८३ ॥

ஜந்துஷு பகவத்பாவம் பகவதி பூதாநி பச்யதி க்ரமச: ।
ஏதாத்ருசீ தசா சேத் ததைவ ஹரிதாஸ வர்ய: ஸ்யாத் ॥

जन्तुषु-பிராணிகளிடத்தில், भगवद्भावं-பகவானுடைய ஸ்வரூபத்தையும், भगवति-பகவானிடத்தில், क्रमशः-முறையாக, भूतानि-எல்லா பூதங்களையும், पश्यति-பார்க்கிறான். एतादृशी-இப்படிப்பட்ட, दशा-நிலைமை, चेत्-இருக்குமாகில், तदैव-அப்பொழுதுதான், हरिदासवर्यः-விஷ்ணுபக்தர்களுக்குள் சிறந்தவனாக, स्यात् ஆவான்.

இவ்வாறு ஸூக்ஷ்ம பக்தி பண்ணுகிறவன் எல்லா பிராணிகளுக்குள்ளும் பகவானுடைய ஸ்வரூபத்தையே பார்க்கிறான். அதுபோலவே பகவானிடத்திலும் எல்லா பூதங்களும் நிறைந்திருப்பதையும் பார்க்கிறான். இவ்வாறு எவன் ஒருவன் பார்க்கிறானோ அவனே ஹரிபக்தர்களுக்குள் தலைசிறந்து விளங்குகிறான். (183)



## १७. ध्यानविधिप्रकरणम् ॥

(அ) இவ்வாறு ஸ்தூல பக்தியையும் ஸூக்ஷ்ம பக்தியையும் அந்தந்த பக்தர்களின் லக்ஷணங்களையும் விரிவாகக் கூறிவிட்டு பூர்ணமான பக்தி கொண்டவனின் அடையாளத்தையும் கூறிவிட்டு இனி பக்தர்கள் தியானம் செய்வதற்காக ஸகுண மூர்த்தியை வர்ணிக்கிறார் :—

यमुनातटनिकटस्थितवृन्दावनकानने महारम्ये ।
कल्पद्रुमतलभूमौ चरणं चरणोपरि स्थाप्य ॥ १८४ ॥

तिष्ठन्तं घननीलं स्वतेजसा भासयन्तमिह विश्वम् ।
पीताम्बरपरिधानं चन्दनकर्पूरलिप्तसर्वाङ्गम् ॥ १८५ ॥

आकर्णपूर्णनेत्रं कुण्डलयुगमण्डितश्रवणम्।
मन्दस्मितमुखकमलं सुकौस्तुभोदारमणिहारम् ॥ १८६ ॥

वलयाङ्गुलीयकाद्यानुज्ज्वलयन्तं स्वलंकारान् ।
गलविलुलितवनमालं स्वतेजसापास्तकलिकालम् ॥ १८७ ॥

गुञ्जारवालिकलितं गुञ्जापुञ्जान्विते शिरसि ।
भुञ्जानं सह गोपैः कुञ्जान्तरवर्तिनं हरिं स्मरत ॥ १८८ ॥

## 17. த்யானவிதிப்ரகரணம்.

யமுநா தட நிகட ஸ்தித ப்ருந்தாவன கானனே மஹாரம்யே ।
கல்பத்ரும தல பூமௌ சரணம் சரணோபரி ஸ்தாப்ய ॥

திஷ்டந்தம் கன நீலம் ஸ்வதேஜஸா பாஸயந்தமிஹ விஶ்வம்।
பீதாம்பர பரிதானம் சந்தன கர்பூர லிப்த ஸர்வாங்கம் ॥

ஆகர்ண பூர்ண நேத்ரம் குண்டலயுக மண்டித ச்ரவணம் ।
மந்தஸ்மித முககமலம் ஸுகௌஸ்துபோதார மணிஹாரம் ॥

வலயாங்குலீயகாத்யானுஜ்வலயந்தம் ஸ்வலங்காரான் ।
கல விலுலித வனமாலம் ஸ்வதேஜஸாபாஸ்த கலிகாலம் ॥

குஞ்ஜா ரவாலி கலிதம் குஞ்ஜா புஞ்ஜாந்விதே ஶிரஸி ।
புஞ்ஜானம் ஸஹ கோபை: குஞ்ஜாந்தர வர்த்தினம்
ஹரிம் ஸ்மரத ॥

**महारम्ये**–மிகவும் அழகுவாய்ந்த, **यमुनातट**-யமுனை நதிக் கரையின், **निकट**–அருகில், **स्थित**-உள்ள, **वृन्दावनकानने**–பிருந் தாவனமென்ற அரண்யத்தில், **कल्पद्रुमतलभूमौ**–கற்பக மரத் தினுடைய அடியில், **चरणोपरि**–காலின்மேல், **चरणं**–காலை, **स्थाप्य**–வைத்துக்கொண்டு, **तिष्ठन्तं**-நிற்கின்றவராயும், **घननीलं**-மேகம்போல நீலவண்ணனாயும், **इह**-இங்கு, **स्वतेजसा**-தன்னுடைய ஒளியால், **विश्वं**-உலகை, **भासयन्तं**–விளங்கச் செய்கின்றவராயும், **पीताम्बर**-மஞ்சள் பட்டாடையை, **परिधानं**-உடுத்தியவராயும், **चन्दन**-சந்தனம், **कर्पूर**-கற்பூரம் இவற்றால், **लिप्तसर्वाङ्गम्**–பூசப்பட்ட எல்லா அங்கங்களை உடையவராயும், **आकर्णपूर्णनेत्रं**-காதுவரையில் நீண்ட அழகிய கண்களையுடையவராயும், **कुण्डलयुग**-இருகுண்டலங்களால், **मण्डितश्रवणं**–அழகுபடுத்தப்பட்ட அழகுவாய்ந்த செவி களுடையவராயும், **मन्दस्मित**–புன்னகைபூத்த, **मुखकमलं**–தாமரைபோன்ற முகத்தையுடையவராயும், **सुकौस्तुभ**–கௌஸ்துபமென்று பெயர்கொண்ட ரத்னத்துடன் கூடிய **उदार**–சிறந்த, **मणिहारम्**–ரத்ன மாலையையுடையவராயும், **वलयांगुलीयकाद्यान्**–வளையல்கள், மோதிரங்கள் முதலிய, **स्वलङ्कारान्**–சிறந்த அலங்காரங்களை, **उज्ज्वलयन्तं**–விளங்கச் செய்கின்றவராயும், **गले**-கழுத்தில், **विलुलित**–அசைகின்ற, **वनमालं**-வனமாலையை உடையவராயும், **स्वतेजसा**-தன் னுடைய தேஜஸால், **अपास्त**-நீக்கப்பட்ட, **कलिकालं**–கலிகாலத்தையுடையவராயும், **गुञ्जापुञ्जान्विते**-குஞ்சாபுஷ்பங் களையுடைய, **शिरसि**–தலையில், **गुञ्जारव**–இனிய ரீங்காரத்தை யுடைய, **अलिकलितं**–வண்டுகளால் விளங்குகின்றவராயும், **गोपैः सह**-இடையர்களுடன் கூட, **भुञ्जानं**–போஜனம்

செய்கின்றவராயும், कुञ्जान्तरवर्तिनं-கொடி மண்டபத்தின் நடுவில் வீற்றிருக்கின்றவராயும் விளங்குகின்ற, हरिं-ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை, स्मरत-த்யானம் செய்யுங்கள்.

யமுனாநதிக்கரையில் பிருந்தாவனத்தில் மிகவும் அழகாக அமைந்துள்ள கற்பக விருக்ஷத்தினடியில் கால் மேல் காலை வைத்துக்கொண்டு அமர்ந்திருக்கின்றவரும், நீருண்டமேகம்போல் நீல நிறத்தையுடையவனும், தன்னுடைய சிறந்த ஒளியால் உலகமனைத்தையும் விளங்கச்செய்கின்றவரும், பீதாம்பரத்தை அணிந்தவரும், பச்சைக் கற்பூரம், சந்தனக்குழம்பு முதலியவற்றைப் பூசிக்கொண்டவரும், செவிவரையில் நீண்ட அழகிய கண்களையுடையவரும், இரத்தின குண்டலங்களால் அழகு வாய்ந்த காதுகளையுடையவரும், நன்கு மலர்ந்த தாமரைபோல் விளங்குகின்ற புன்முறுவல் பூத்த முகத்தையுடையவரும், சிறந்த கௌஸ்துபமென்ற இரத்தினம் பதித்த ஹாரத்தை யணிந்தவரும், வளையல்கள், மோதிரங்கள் முதலிய அணிகலன்களுக்கு ஒளியைக் கொடுப்பவரும் கழுத்தில் அசைகின்ற வனமாலையைத் தரித்தவரும், தன்னுடைய மகிமையால் க்லிகாலத்தின் தோஷத்தை நாசம் செய்கின்றவரும், சிறந்த மலர்களால் அலங்கரிக்கப்பட்ட சிரஸ்ஸில் சுற்றிவரும் வண்டுகளின் இன்னிசையால் விளங்குபவரும், இடையர்களுடன் கூட விருந்துண்பவரும், கொடிமண்டபங்களில் வசிக்கின்றவருமான ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவை மனதில் த்யானம் செய்யுங்கள். (184—188)

मन्दारपुष्पवासितमन्दानिलसेवितं परानन्दम् ।
मन्दाकिनीयुतपदं नमत महानन्ददं महापुरुषम् ॥ १८९ ॥

மந்தார புஷ்ப வாஸித மந்தாநில ஸேவிதம் பரானந்தம் ।
மந்தாகினீ யுதபதம் நமத மஹானந்ததம் மஹாபுருஷம் ॥

मन्दारपुष्प-மந்தார மலரால், वासित-நறுமணம் கமழும்படி செய்யப்பட்ட, मन्दानिल-தென்றல் காற்றால், सेवितं-சேவிக்கப்பட்டவரும், परानन्दं-பேரானந்தஸ்வரூபியும், मन्दाकिनीयुत-கங்கையுடன்கூடிய, पदं-பாதத்தையுடையு

வரும், महानन्दद-பேரானந்தத்தையளிப்பவரும், महापुरुष-புருஷோத்தமனுமான ஸ்ரீ கிருஷ்ண பிரானை, नमत-வணங்குவீராக.

மந்தாரமலரால் மிகுந்த நறுமணமுள்ளதாகச் செய்யப் பட்ட தென்றல் காற்றால் ஸேவிக்கப்பட்டவரும், பேரானந்த ஸ்வரூபியாயும், கங்கையைப்பெற்ற பாதங்களையுடைய வராயும், பேரானந்த மளிப்பவராயும் புருஷோத்தமனுமான அந்த ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவை வணங்குங்கள். (189)

सुरभीकृतदिग्वलयं सुरभिशतैरावृतं सदा परितः ।
सुरभीतिक्षपणपरं सुरभीयं यादवं नमत ॥ १९० ॥

ஸுரபீக்ருத திக்வலயம் ஸுரபிஶதைராவ்ருதம் ஸதா பரித:।
ஸுரபீதிக்ஷபணபரம் ஸுரபீயம் யாதவம் நமத ॥

सदा-எப்பொழுதும், सुरभीकृत-பரிமளமுள்ளதாகச் செய்யப்பட்ட, दिग्वलयं-திசைகளின் கூட்டத்தையுடைய வரும், परितः-நான்கு பக்கங்களிலும், सुरभिशतैः-நூற்றுக் கணக்கான பசுக்களால், आवृतं-சூழப்பட்டவரும், सुर-தேவர் களுடைய, भीति-பயத்தை, क्षपणपरं-போக்குவதில் ஈடுபட்ட வராயும், सुरभीयं-பசுக்களுக்குஹிதம் செய்பவரும், यादवं-யதுகுலத்தில் உதித்தவராயுமுள்ள ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை, नमत-வணங்குவீராக.

தன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தின் சிறந்த மணத்தால் திசைகள் அனைத்தையும் வாசனை யுள்ளதாகச் செய்கின்றவரும், எப்பொழுதும் பசுக்களின் கூட்டங்களால் சூழப்பட்டவரும், தேவர்களின் அச்சத்தைப் போக்குகின்ற வரும் பசுக்களுக்கு நன்மை செய்பவரும், யதுகுலத்தில் உதித்தவருமான ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவை வணங்கு வீராக. (190)

कन्दर्पकोटिसुभगं वाञ्छितफलदं दयार्णवं कृष्णम् ।
त्यक्त्वा कमन्यविषयं नेत्रयुगं द्रष्टुमुत्सहते ॥ १९१ ॥

கந்தர்ப்பகோடி ஸுபகம் வாஞ்சித பலதம்
தயார்ணவம் க்ருஷ்ணம் ।
த்யக்த்வா கமன்யவிஷயம் நேத்ரயுகம் த்ரஷ்டுமுத்ஸஹதே ॥

**कन्दर्पकोटिसुभगं**-கோடிமன்மதர்களின் அழகுடையவரும் **वाञ्छित**-காரிய, **फलदं**-பலனையளிப்பவரும், **दयार्णवं**-கருணைக்கடலுமான, **कृष्णं**-கண்ணனை, **त्यक्त्वा**-விட்டுவிட்டு **कं अन्यविषयं**-வேறு எந்தப்பொருளை, **द्रष्टुं**-காண்பதற்கு, **नेत्रयुगं**-கண்ணிரண்டும், **उत्सहते**-உத்ஸாஹமடையும்?

கண்ணபிரான் அழகிய திருமேனி படைத்தவர். கோடிக்கணக்கான மன்மதர்கள் கூட அவரை வெல்ல முடியாது. அவ்வாறு அவருடைய தேககாந்தி கண்களைக் கவரக்கூடியது. அவர் தன்னை அண்டியவர்களுக்கு வேண்டிய வரங்களைத் தருகின்றார், அவரே கருணைக்கடல். அவ்வாறு விளங்கும் கண்ணபிரானை விட்டுவிட்டுக் கண்ணிரண்டும் வேறு எந்தப் பொருளைத்தான் நாடிச் செல்லும்? (191)

**पुण्यतमामतिसरसां मनोभिरामां हरेः कथां त्यक्त्वा ।**
**श्रोतुं श्रवणद्वन्द्वं ग्राम्यं कथमादरं वहति ॥ १९२ ॥**

புண்யதமாமதிஸரஸாம் மனோபிராமாம்
ஹரே: கதாம் த்யக்த்வா ।
ஶ்ரோதும் ஶ்ரவணத்வந்த்வம் க்ராம்யம் கதமாதரம் வஹதி ॥

**पुण्यतमां**-மிகுந்த புண்யத்தையுடையதாயும், **अतिसरसां**-மிகுந்த சுவை பொருந்தியதாயும், **मनोभिरामां**-மனதை மகிழச் செய்கின்றதாயும் உள்ள; **हरेः**-விஷ்ணுவினுடைய, **कथां**-கதையை, **त्यक्त्वा**-விட்டுவிட்டு, **श्रवणद्वन्द्वं**-காதிரண்டும், **ग्राम्यं**-பண்பற்ற விஷயத்தை, **श्रोतुं**-கேட்பதற்கு, **कथं**-எவ்வாறு, **आदरं**-ஆதரவை, **वहति**-தாங்கும்?

கண்ணபிரானின் கதை மிகவும் புனிதமானது. பாபத்தைப் போக்கும் தன்மை வாய்ந்தது. கேட்பதற்கும்

மிகவும் இனிமையானது. மற்றவைகளோ சுவையற்றவை. அருவெறுப்பைத் தரக்கூடியவை. ஆதலால் செவியிரண்டும் புனிதமான கண்ணபிரானின் கதையை விடுத்து வெறுக்கத்தக்க வேறு விஷயங்களில் எவ்வாறு சிரத்தை கொள்ளும்? (192)

दौर्भाग्यमिन्द्रियाणां कृष्णे विषये हि शाश्वतिके ।
क्षणिकेषु पापकरणेष्वपि सज्जन्ते यदन्यविषयेषु ॥ १९३ ॥

தௌர்பாக்ய மிந்த்ரியாணாம் க்ருஷ்ணே
விஷயே ஹி ஶாஸ்வதிகே ।
க்ஷணிகேஷு பாப கரணேஷ்வபி
ஸஜ்ஜந்தே யதன்யவிஷயேஷு ॥

**शाश्वतिके**-என்றுமழியாத, **कृष्णे विषये**-கிருஷ்ணன் என்ற பொருள் இருக்கும்பொழுது, **क्षणिकेषु**-கணநேரமே நிலைத்திருக்கின்றவைகளாயும், **पापकरणेषु अपि**-பாவத்திற்குச் சாதனங்களாயும் இருப்பினும்கூட, **अन्यविषयेषु**-மற்ற பொருள்களில், **सज्जन्ते**-ஈடுபடுகின்றன (इति) **यत्**-என்ற யாது உண்டோ (तत् அது) **इन्द्रियाणां**-புலன்களின், **दौर्भाग्यं हि**-துரதிருஷ்டமல்லவா?

கண்ணபிரான் எங்கும் நிறைந்த பரம்பொருள். அவன் எல்லாக் காலங்களிலும் அழியாமல் விளங்கிக்கொண்டிருக்கிறான். அவன் புனிதமானவன். மற்றப் பொருள்களோவெனில் பாபத்திற்குக் காரணமாக ஆகின்றன. அவைகள் ஸ்வல்ப காலத்திற்குள் தோன்றி மறைந்து விடுகின்றன. அவ்வாறு இருப்பினும் ஐம்புலன்களும் அழியும் தன்மை வாய்ந்த அந்த அற்பப் பொருள்களிலேயே ஈடுபடுகின்றன. அது அப்பொறிகளின் பாக்கியமற்ற தன்மையேயாகும்.



## १८. सगुणनिर्गुणयोरैक्यप्रकरणम् ॥

(அ) இவ்வாறு தியானத்திற்காக ஸகுணமூர்த்தியை வர்ணித்துவிட்டு இனி இந்த ஸகுணவஸ்துவும் நிர்குணப் பொருளும் ஒன்றேதான். தத்வத்தில் வேற்றுமை இல்லை என்பதை பல பிரமாணங்களால் விரிவாக விளக்குகிறார் :—

श्रुतिभिर्महापुराणैः सगुणगुणातीतयोरैक्यम् ।
यत्प्रोक्तं गूढतया तदहं वक्ष्येऽतिविशदार्थम् ॥ १९४ ॥

## 18. ஸகுண நிர்குண ஐக்ய ப்ரகரணம்

ஶ்ருதிபிர் மஹாபுராணை: ஸகுண குணாதீதயோரைக்யம் ।
யத் ப்ரோக்தம் கூடதயா ததஹம் வக்ஷ்யேऽதி
விஶதார்த்தம் ॥

श्रुतिभिः-வேதங்களாலும், महापुराणैः-பெரிய புராணங்களாலும், सगुणगुणातीतयोः-ஸகுணப்பிரம்மத்திற்கும் நிர்குண ப்ரம்மத்திற்கும், यत्-எந்த, ऐक्यं-ஒருமைப்பாடு, गूढतया-மறைபொருளாக, प्रोक्तम्-கூறப்பட்டுள்ளதோ, तत्-அதை, अहं-நான், अतिविशदार्थं-மிகவும் தெளிவாக, वक्ष्ये-சொல்லப் போகிறேன்.

வேதங்களாலும் புராணங்களாலும் ஸகுணப்பிரம்மத்திற்கும் நிற்குணப்ரம்மத்திற்கும் பேதமின்மை ரஹஸ்யமாகக் கூறப்பட்டுள்ளது அதனால் அவற்றுள் கூறப்பட்டுள்ள தத்வத்தைத் தெரிந்துகொள்வது கடினம். ஆகையால் அந்த விஷயத்தை மிகத் தெளிவாகக் கூறுகிறேன். (194)

भूतेष्वन्तर्यामी ज्ञानमयः सच्चिदानन्दः ।
प्रकृतेः परः परात्मा यदुकुलतिलकः स एवायम् ॥ १९५ ॥

பூதேஷ்வந்தர்யாமீ ஞானமய: ஸச்சிதாநந்த: ।
ப்ரக்ருதே: பர: பராத்மா யதுகுல திலக: ஸ ஏவாயம் ॥

**भूतेषु**-எல்லா பிராணிகளிடத்திலும், **अन्तर्यामी**-உள்ளே இருந்து அடக்கி ஆள்பவராயும், **ज्ञानमयः**-ஞானரூபியாயும், **सच्चिदानन्दः**-ஸச்சிதானந்தஸ்வரூபியாயும், **प्रकृतेः**-மாயைக்கும், **परः**-மேலானவராயும் எவர் விளங்குகிருரோ, **सः**-அவர், **अयं** - இந்த, **यदुकुलतिलकः एव** - யதுகுல திலகராகிய ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா தான்.

நிர்குணஸ்வரூபியான பரம்பொருள் உலகிலுள்ள எல்லா ஜீவராசிகளுக்குள்ளும் விளங்கிவருகிருர். அவர் ஞான வடிவமுள்ளவர். ஸச்சிதாநந்தஸ்வரூபி. மாயைக்கு அப்பால்பட்டவர். அவ்வாறு விளங்கும் நிர்குணஸ்வரூபமே யதுகுல திலகராகிய ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா. (195)

(அ) இதை ஆக்ஷேபித்துக் கேள்வி கேட்கிருர் :—

**ननु सगुणो दृश्यतनुस्तथैकदेशाधिवासश्च ।**
**स कथं भवेत्परात्मा प्राकृतवद्रागरोषयुतः ॥ १९६ ॥**

நநு ஸகுணோ த்ருஶ்ய தனுஸ் ததைகதேஶாதிவாஸஶ்ச ।
ஸ கதம் பவேத் பராத்மா ப்ராக்ருதவத் ராகரோஷ யுத: ॥

**सगुणः**-ஸகுணமூர்த்தி, **दृश्यतनुः**-காணக்கூடிய சரீர முடையவர். **तथा**-அதுபோலவே, **एकदेशाधिवासः च ननु**-ஒரு சிறிய இடத்தில் வசிக்கின்றவர் அல்லவா. **प्राकृतवत्**-ஜீவன்போல், **राग**-ஆசை, **रोष**-கோபம் இவைகளுடன், **युतः**-கூடியவரான, **सः**-அவர், **कथं**-எவ்வாறு, **परात्मा**-பரமாத்மாவாக, **भवेत्** -இருக்கமுடியும் ?

ஸகுணன் எல்லோராலும் பார்க்கத்தகுந்த திவ்ய மங்கள ரூபத்துடன் விளங்குகிறவர். அவர் ஒரு சிறிய இடத்தில் அமர்ந்துள்ளார். பிராகிருதனை ஜீவன்போல் விருப்பு வெறுப்புகளுள்ளவர். நிர்குணமோவெனில் எங்கும் நிறைந்தது. புலன்களுக்கு எட்டாதது. விருப்பு வெறுப்பு அற்றது. அதனல் ஸகுணனை எவ்வாறு பரமாத்மா என்று கூற முடியும் ? (196)

(அ) ஸகுணமும் நிர்குணமும் ஒன்று தான் என்பதற்குப் பல காரணங்களைக் கூறி ஸமாதானம் சொல்கிறார்:-

इतरे दृश्यपदार्था लक्ष्यन्तेऽनेन चक्षुषा सर्वे ।
भगवाननया दृष्टया न लक्ष्यते ज्ञानदृग्गम्यः ॥ १९७ ॥

இதரே த்ருஶ்ய பதார்த்தா: லக்ஷ்யந்தேऽநேந
சக்ஷுஷா ஸர்வே ।
பகவாநநயா த்ருஷ்ட்யா ந லக்ஷ்யதே ஞான த்ருக்கம்ய: ॥

इतरे-மற்ற, सर्वे दृश्यपदार्थाः-காணத்தகுந்த எல்லாப் பொருள்களும், अनेन चक्षुषा-இந்தக் கண்ணால், लक्ष्यन्ते-பார்க்கப்படுகின்றன. ज्ञानदृग्-அறிவாகிய கண்ணால், गम्यः-அடையத்தகுந்த, भगवान्-பரம்பொருள், अनया दृष्टया-இந்தக் கண்ணால், न लक्ष्यते-பார்க்கப்படுகிறதில்லை.

உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் ஊனக் கண்ணால் காணப்படுகின்றன. ஆனால் பரம்பொருள் ஞானம் என்ற கண்ணால் பார்க்கத்தக்கவர். அவ்வாறு அறியத்தகுந்த அந்த பகவான் நம்முடைய கண்களால் காணப்படுவதில்லை.

[ஸகுணம் பரமாத்மாவல்ல என்பதற்கு மூன்று காரணங்கள் கூறினார். (1) காணத்தக்கவர், (2) ஒரு சிறிய இடத்தில் வாஸம் (3) ராகத்வேஷங்கள். ஸகுண மூர்த்தி ஞானத்தால் அறியத்தக்கவர், மற்றவை புலன்களால் அறியத்தக்கவை என்ற வேற்றுமையைக் காட்டி முதலாவதற்குப் பதில் கூறுகிறார். கிருஷ்ணனின் உண்மை ஸ்வரூபம் புலன்களால் அறியத்தக்கதல்ல. ஆதலால் அவர் பரமாத்மா தான்.] (197)

(அ) கிருஷ்ணன் புலன்களால் அறியத்தக்கவரல்ல என்பதற்கு பிரமாணம் காட்டுகிறார் :—

यद्विश्वरूपदर्शनसमये पार्थाय दत्तवान्भगवान् ।
दिव्यं चक्षुस्तस्माददृश्यता युज्यते नृहरौ ॥ १९८ ॥

யத் விஶ்வரூப தர்ஶன ஸமயே
பார்த்தாய தத்தவான் பகவான் ।
திவ்யம் சக்ஷுஸ் தஸ்மாதத்ருஶ்யதா யுஜ்யதே ந்ருஹரௌ ॥

विश्वरूप-விஶ்வரூபத்தை, दर्शनसमये-காட்டும்பொழுது, भगवान्-பரமாத்மா, पार्थाय-அர்ஜுனனுக்கு, दिव्यं-ஞான மாகிய, चक्षुः-கண்ணை, दत्तवान्-கொடுத்தார், इति-என்று, यत्-யாது உளதோ, तस्मात्-ஆகையால், नृहरौ-நரஸிம்ம ரூபியாகிய பரமாத்மாவினிடத்தில், अदृश्यता-காணப் படாமை என்பது, युज्यते-பொருத்தமானது.

பரமாத்மா கண்ணுக்குப் புலப்படாதவர். அதனால்தான் அர்ஜுனனுக்குத் தன்னுடைய உண்மையான ஸ்வரூபத் தைக் காட்டுவதற்காகப் பகவான் दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् (உனக்கு திவ்யமான கண்ணைக் கொடுக் கின்றேன். என்னுடைய உண்மையான ஸ்வரூபத்தை பார்ப்பாயாக) என்று கூறி ஞானக்கண்ணை ஈந்தருளு கின்றார். ஆகையாலேயே நரஸிம்மரூபத்தைத் தாங்கிய பகவான் கண்களால் பார்க்கமுடியாதவர் என்று நன்கு புலப்படுகின்றது. (198)

(அ) இரண்டாவதான "ஒரு சிறிய இடத்தில் வாஸம்" என்பதற்கு ஸமாதானம் கூறுகிறார் :—

साक्षाद्यथैकदेशे वर्तुलमुपलभ्यते रवेर्बिम्बम् ।
विश्वं प्रकाशयति तत्सर्वैः सर्वत्र दृश्यते युगपत् ॥ १९९ ॥

ஸாக்ஷாத் யதைகதேஶே வர்த்துலமுபலப்யதே
ரவேர் பிம்பம் ।
விஶ்வம் ப்ரகாஶயதி தத் ஸர்வை: ஸர்வத்ர த்ருஶ்யதே
யுகபத் ॥

यथा-எப்படி, रवेः-சூரியனுடைய, बिम्बं-வடிவம், साक्षात्-கண்கூடாக, एकदेशे-ஒரு இடத்தில், वर्तुलं-வட்டமாக, उपलभ्यते-காணப்படுகிறது. तत्-அது, विश्वं-உலகு முழு

வதையும், प्रकाशयति-விளங்கச்செய்கிறது. सर्वैः-எல்லோராலும், सर्वत्र-எல்லா இடத்திலும், युगपत्-ஒரே சமயத்தில், दृश्यते-காணப்படுகிறது.

சூரியனுடைய பிம்பம் உருண்டை வடிவமுள்ளதாக ஆகாசத்தின் ஒரு கோணத்தில் காணப்படுகிறது. அந்த சூரியனுடைய பிம்பம் உலகம் முழுவதையும் பிரகாசிக்கச் செய்கின்றது. அது ஒரே ஸமயத்தில் எல்லோராலும் எல்லா தேசங்களிலும் காணப்படுகிறது. (199)

यद्यपि साकारोऽयं तथैकदेशी विभाति यदुनाथः ।
सर्वगतः सर्वात्मा तथाप्ययं सच्चिदानन्दः ॥ २०० ॥

யத்யபி ஸாகாரோऽயம் ததைகதேஶீ விபாதி யதுநாத: ।
ஸர்வகத: ஸர்வாத்மா ததாப்யயம் ஸச்சிதாநந்த: ॥

तथा-அதுபோலவே, अयं-இந்த, यदुनाथः-யாதவர்களுக்கு நாதனாகிய ஸ்ரீ கிருஷ்ணன், साकारः-தோற்றத்தை உடையவனாகவும், एकदेशी-ஒரு இருப்பிடத்தையுடையவனாகவும், यद्यपि विभाति-விளங்குகிறவராக இருந்தபோதிலும், तथापि-அப்படியிருந்தாலும், अयं-இவன், सर्वगतः-எங்கும் நிறைந்தவனாயும், सर्वात्मा-அனைத்திற்கும் ஆத்மாவாயுமுள்ள, सच्चिदानन्दः-ஸச்சிதாநந்தஸ்வரூபி.

அதுபோல் யாதவர்களுக்குத் தலைவனாகிய கண்ணபிரான் ஸகுணமூர்த்தியாய் ஒரு இடத்தில் வசிப்பவனாகத் தோன்றியபோதிலும் அவர் எங்கும் நிறைந்த ஸர்வாத்மாவான ஸச்சிதாநந்தரூபிதான் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

(அ) இதற்குப் பிரமாணம் காட்டுகிறார் :—

एको भगवान् रेमे युगपद्गोपीष्वनेकासु ।
अथवा विदेहजनकश्रुतदेवभूदेवयोर्हरिर्युगपत् ॥ २०१ ॥

ஏகோ பகவான் ரேமே யுகபத் கோபீஷ்வநேகாஸு ।
அதவா விதேஹ ஜனக ச்ருததேவ பூதேவயோர்
ஹரிர் யுகபத் ॥

भगवान् -ஸ்ரீ கிருஷ்ணபகவான், एकः-ஒருவரே, युगपत् - ஒரே சமயத்தில், अनेकासु गोपीषु-பல கோபஸ்திரீகளிடத்தில் रेमे-ராஸக்ரீடை செய்தார். अथवा-அல்லது, हरिः-விஷ்ணு, युगपत् - ஒரேசமயத்தில், विदेहजनक- விதேஹநாட்டு மன்னனாகிய ஜனகர், श्रुतदेवभूदेवयोः-ச்ருததேவர் என்ற அந்தணர் இவ்விருவர்களிடத்திலும், रेमे-விருந்துண்டு களிப்புற்றார்.

ஒரே ஸ்ரீ கிருஷ்ணபகவான் ஒரே சமயத்தில் பல கோபஸ்திரீகளுடன் ராஸக்ரீடை செய்தார். மேலும் அவர் ஒருவரே ஒரேசமயத்தில் விதேஹ நாட்டரசனான ஜனகருடைய இல்லத்திலும் ச்ருததேவர் என்ற பிராமணருடைய கிருஹத்திலும் விருந்துண்டு மகிழ்ச்சி பெற்றிருக்கிறார். (201)

अथवा कृष्णाकारां स्वचमूं दुर्योधनोऽपश्यत् ।
तस्माद्व्यापक आत्मा भगवान्हरिरीश्वरः कृष्णः ॥ २०२ ॥

அதவா க்ருஷ்ணாகாராம் ஸ்வசமூம் துர்யோதனோऽபச்யத் ।
தஸ்மாத் வ்யாபக ஆத்மா பகவான் ஹரிரீச்வர: க்ருஷ்ண: ॥

अथवा-அல்லது, दुर्योधनः-துர்யோதனன், स्वचमूं-தன்னுடைய ஸைன்யத்தை, कृष्णाकारां- ஸ்ரீ கிருஷ்ணனுடைய உருவமுள்ளதாகவே, अपश्यत् -பார்த்தான். तस्मात् - ஆகையால், कृष्णः-கிருஷ்ணன், भगवान् -அணிமா முதலிய ஐச்வர்யங்கள்கொண்ட, हरिः-விஷ்ணு. ईश्वरः-ஈச்வரன், व्यापकः-எங்கும் நிறைந்த, आत्मा-பரமாத்மா.

துரியோதனன் தன்னுடைய ஸைன்யத்தை ஸ்ரீ கிருஷ்ண வடிவமுள்ளதாகவே கண்டான். ஆகவே, ஒரே சமயத்தில் பல இடங்களில் தோன்றுவதால் கிருஷ்ணன் ஈசுவரன்தான். அவன் பகவான் விஷ்ணு. அவன் எங்கும் நிறைந்த பரமாத்மா. (202)

(அ) கிருஷ்ணனுக்கு ராகத்வேஷங்கள் கிடையாது என்பதைக் காட்டுகிறார் :—

**वक्षसि यदा जघान श्रीवत्सः श्रीपतेः स किं द्वेष्यः ।**
**भक्तानामसुराणामन्येषां वा फलं सदृशम् ॥ २०३ ॥**

வக்ஷஸி யதா ஜகாந ஸ்ரீவத்ஸ: ஸ்ரீபதே: ஸ கிம் த்வேஷ்ய: ।
பக்தாநாமஸுராணாமன்யேஷாம் வா பலம் ஸத்ருஶம் ॥

**श्रीवत्सः**-ஸ்ரீவத்ஸன் என்பவன், **यदा**-எப்பொழுது, **वक्षसि**-மார்பில், **जघान**-உதைத்தானே, **सः**-அவன், **श्रीपतेः**-லக்ஷ்மீபதியான பகவானுக்கு, **किं द्वेष्यः**-பகைவனா ? **भक्तानां**-பக்தர்களுக்கும், **असुराणां**-அஸுரர்களுக்கும், **अन्येषां वा**-மற்றவர்களுக்கும், **फलं**-பலன், **सदृशम्**-ஸமமானதே.

ஸ்ரீவத்ஸன் என்பவன் பகவானுடைய மார்பில் உதைத்தான். அதனால் அவன் அந்த லக்ஷ்மீபதியின் பகைவன் ஆனானா? இல்லை. ஆகையால் பக்தர்களுக்கும் அஸுரர்களுக்கும் மற்றவர்களுக்கும் பகவானால் ஏற்படும் பயன் ஸமமானதே. (203)

**तस्मान्न कोऽपि शत्रुर्नो मित्रं नाप्युदासीनः ।**
**नृहरिः सन्मार्गस्थः सफलः शाखीव यदुनाथः ॥ २०४ ॥**

தஸ்மாந் ந கோऽபி ஶத்ருர் நோ மித்ரம் நாப்யுதாஸீந: ।
ந்ருஹரி: ஸந்மார்கஸ்த: ஸபல: ஶாகீவ யதுநாத: ॥

**तस्मात्**-ஆகையால் (பகவானுக்கு), **कोऽपि**-ஒருவனும், **न शत्रुः**-பகைவன் இல்லை, **नो मित्रं**-நண்பனும் இல்லை, **उदासीनः अपि न**-உதாஸீனனும் இல்லை. **सन्मार्गस्थः**-நல்ல வழியில் நிற்கின்ற, **सफलः**-பழங்கள் நிறைந்த, **शाखी इव**-விருக்ஷம்போல, **यदुनाथः**-யாதவகுலத்திற்குத் தலைவரான **नृहरिः**-நரஸிம்மன் (விளங்குகிறான்.)

ஆகையால் அந்தப் பரம்பொருளுக்குப் பகைவனுகவோ, நண்பனுகவோ, உதாஸீனனுகவோ ஒருவரும் இல்லை. நேர் வழியில் பழங்களுடன் நிற்கும் மரம் நண்பனென்றே, எதிரி என்றே, உதாஸீனன் என்றே ஒருவரிடமும் வேற்றுமை பாராட்டுவதில்லை. எல்லோரையும் ஸமமாகப் பாவித்துத் தான் நிழலையும் கனிகளையும் தருகிறது. இதுபோலவே ஈசுவரனும் வேற்றுமை காட்டுவதில்லை. (204)

लोहशलाकानिवहैः स्पर्शाश्मनि भिद्यमानेऽपि ।
स्वर्णत्वमेति लौहं द्वेषादपि विद्विषां तथा प्राप्तिः ॥ २०५ ॥

லோஹஶலாகாநிவஹை: ஸ்பர்ஶாஶ்மநி பித்யமாநேऽபி ।
ஸ்வர்ணத்வமேதி லௌஹம் த்வேஷாதபி
வித்விஷாம் ததா ப்ராப்தி: ॥

**लोहशलाकानिवहैः**-இரும்புக் கம்பிகளின் கூட்டங்களால், **स्पर्शाश्मनि**-ஸ்பர்சக்கல், **भिद्यमाने अपि**-பிளக்கப்பட்டாலும் கூட, **लौहं**-இரும்பு **स्वर्णत्वं**-பொன்னின் தன்மையை, **एति**-அடைகிறது. **तथा**-அதுபோலவே, **विद्विषां**-பகைவர்களுக்கு, **द्वेषात् अपि**-த்வேஷத்தாலும்கூட, **प्राप्तिः**-பரம்பொருளை அடைதல் (ஏற்படுகின்றது.)

ஸ்பர்சக்கல் தன்னுடன் சேர்ந்த பிற உலோகத்தைத் தங்கமாக ஆக்கிவிடுகிறது. தன்னையே பிளக்கும் இரும்புக் கம்பியையும் அது தங்கமாக ஆக்கிவிடுகிறது. அதுபோலவே பரமாத்மாவை த்வேஷிக்கிறவர்களும் அந்த த்வேஷத்தினுலேயே பரமாத்ம ஸாயுஜ்யத்தை அடைகிறுர்கள். (205)

(அ) மறுபடியும் கிருஷ்ணன் பரமாத்மா என்பதை ஆக்ஷேபிக்கிறுர் :—

नन्वात्मनः सकाशादुत्पन्ना जीवसंततिश्चेयम् ।
जगतः प्रियतर आत्मा तत्प्रकृते नैव संभवति ॥ २०६ ॥

நன்வாத்மந: ஸகாஶாதுத்பந்நா ஜீவ ஸந்ததிஸ்சேயம் ।
ஜகத: ப்ரியதர ஆத்மா தத் ப்ரக்ருதே நைவ ஸம்பவதி ॥

**आत्मनः सकाशात्**-பரமாத்மாவினிடமிருந்து, **इयं**-இந்த, **जीवसन्ततिः**-ஜீவர்களுடைய பரம்பரை, **उत्पन्ना ननु**-உண்டாயிருக்கிறது அல்லவா ? **जगतः**-உலகைக்காட்டிலும், **आत्मा**-ஆத்மா, **प्रियतरः**-மிகவும் பிரியமானது, **तत्**-அது, **प्रकृते**-இந்த விஷயத்தில், **नैव सम्भवति**-ஏற்படவே செய்யாது.

பரமாத்மாவினிடமிருந்து ஜீவர்கள் உண்டாகியிருக்கிறார்கள். உலகிலுள்ள மற்றப் பொருள்களைக்காட்டிலும் ஆத்மாதான் மிகவும் பிரியமானது. இவ்விரண்டும் கிருஷ்ணனிடம் பொருந்தாதே! கிருஷ்ணனிடமிருந்து ஜீவர்கள் உண்டாகவில்லையே! அவர் எல்லோருக்கும் பிரியமானவர் அல்லவே! இவ்விதமிருக்க அவர் எப்படி பரமாத்மாவாக முடியும்? (206)

(அ) கிருஷ்ணரிடமிருந்து ஜீவர்கள் உண்டானதையும், எல்லோரும் கிருஷ்ணரிடம் மிகுந்த பிரீதிகொண்டிருப்பதையும் காட்டி ஸமாதானம் கூறுகிறார் :—

वत्साहरणावसरे पृथग्वयोरूपवासनाभूषान् ।
हरिरजमोहं कर्तुं सवत्सगोपान्विनिर्ममे स्वस्मात् ॥ २०७ ॥

வத்ஸாஹரணாவஸரே ப்ருதக் வயோ ரூப வாஸநா பூஷான் ।
ஹரிரஜ மோஹம் கர்த்தும் ஸவத்ஸ கோபான்
விநிர்மமே ஸ்வஸ்மாத் ॥

**वत्साहरणावसरे**-கன்றுக்குட்டிகளைத் திருடிச் சென்ற ஸமயத்தில், **हरिः**-ஸ்ரீ கிருஷ்ணபகவான், **अजमोहं**-பிரம்மதேவனுக்கு மோஹத்தை, **कर्तुं**-உண்டுபண்ணுவதற்காக, **स्वस्मात्**-தன்னிடமிருந்து, **पृथक्**-தனித்தனியான, **वयो**-வயது, **रूप**-உருவம், **वासना**-வாஸனை, **भूषान्**-ஆடையாபரணங்கள் இவைகளையுடைய, **सवत्सगोपान्**-கன்றுக்குட்டிகளுடன்கூடிய இடையர்களை, **विनिर्ममे**-படைத்தார்.

பிரம்மதேவர் ஒருசமயம் கோபச்சிறுவர்களேயும் கன்றுக்குட்டிகளேயும் அபகரித்துச்சென்ருர். அப்பொழுது அவருக்கு மோஹம் ஏற்படுவதற்காகக் கண்ணபிரான் தன்னிடமிருந்தே வெவ்வேருன வயது, உருவம், அலங்காரம், ஸம்ஸ்காரம் இவற்றுடன் கூடிய அத்தனே கோபர்களேயும் கன்றுகளேயும் உண்டுபண்ணிஞர். (207)

अग्नेर्यथा स्फुलिङ्गाः क्षुद्रास्तु व्युच्चरन्तीति ।
[1]श्रुत्यर्थं दर्शयितुं स्वतनोरतनोत्स जीवसंदोहम् ॥ २०८ ॥

அக்நேர் யதா ஸ்புலிங்கா: க்ஷுத்ராஸ்து வ்யுச்சரந்தீதி ।
ச்ருத்யர்த்தம் தர்சயிதும் ஸ்வதநோரதநோத்
ஸ ஜீவஸந்தோஹம் ॥

अग्नेः – நெருப்பிலிருந்து, क्षुद्राः – சிறிய, स्फुलिङ्गाः – தீப்பொறிகள், यथा–எப்படி, व्युच्चरन्ति–கிளம்புகின்றனவோ, इति–என்ற, श्रुत्यर्थं-உபநிஷத்தின் பொருளே, दर्शयितुं-நேரில் காட்டுவதற்கு, सः-அந்த பரமாத்மா, स्वतनोः–தன்னுடைய உடலிலிருந்து, जीवसन्दोहम्–ஜீவர்களுடைய ஸமூகத்தை, अतनोत् –படைத்தார்.

"கொழுந்துவிட்டு எரிகிற அக்னியிலிருந்து தீப்பொறிகள் கிளம்புவதுபோல் ஜீவர்கள் பரமாத்மாவினிடத்திலிருந்து உதிக்கின்றன" என்ற உபநிஷத்தின் பொருளே நேரில் காட்டுவதற்காகவே பகவான் தன்னுடைய உடலிலிருந்து அநேக ஜீவர்களேப் படைத்திருக்கிருர். ஆகையால் பல ஜீவர்களேப் படைத்துள்ள கிருஷ்ணன் பரமாத்மா தான்.

(அ) கிருஷ்ணன் எல்லோருக்கும் பிரியமானவர் என்பதைக் காட்டுகிருர் :—

यमुनातीरनिकुञ्जे कदाचिदपि वत्सकांश्च चारयति ।
कृष्णे तथार्यगोपेषु च वरगोष्ठेषु चारयत्स्वारात् ॥ २०९ ॥

1. "यथा सुदीप्तात्पावकात् विस्फुलिङ्गाः सहस्रशः प्रभवन्ते सरूपाः ।
तथाक्षराद्विविधाः सोम्य भावाः प्रजायन्ते" (முண்டகம். 2-1)

वत्सं निरीक्ष्य दूराद्गावः स्नेहेन संभ्रान्ताः ।
तदभिमुखं धावन्त्यः प्रययुर्गोपैश्च दुर्वाराः ॥ २१० ॥

प्रस्रवभरेण भूयः स्रुतस्तनाः प्राप्य पूर्ववद्वत्सान् ।
पृथुरसनया लिहन्त्यस्तर्णकवत्योऽप्यपाययन्प्रमुदा ॥ २११ ॥

गोपा अपि निजबालाञ्जगृहुर्मूर्धानमाघ्राय ।
इत्थमलौकिकलाभस्तेषां तत्र क्षणं ववृधे ॥ २१२ ॥

யமுனு தீர நிகுஞ்ஜே கதாசிதபி வத்ஸகாம்ஃச சாரயதி ।
க்ருஷ்ணே ததார்யகோபேஷு ச வரகோஷ்டேஷு
சாரயத்ஸ்வாராத் ॥

வத்ஸம் நிரீக்ஷ்ய தூராத் காவ: ஸ்நேஹேந ஸம்ப்ராந்தா: ।
ததபிமுகம் தாவந்த்ய: ப்ரயயு: கோபைச்ச துர்வாரா: ॥

ப்ரஸ்ரவபரேண பூய: ஸ்ருதஸ்தநா:
ப்ராப்ய பூர்வவத் வத்ஸான் ।
ப்ருது ரஸநயா லிஹந்த்யஸ் தர்ணகவத்யோऽப்:
யபாயயந் ப்ரமுதா ॥

கோபா அபி நிஜபாலான் ஜக்ருஹுர் மூர்தானமாக்ராய ।
இத்தமலௌகிகலாபஸ் தேஷாம் தத்ர க்ஷணம் வவ்ருதே ॥

कदाचिदपि-ஒருசமயம், यमुनातीरनिकुञ्जे-யமுனை நதிக் கரையிலுள்ள கொடிகளிடையில், कृष्णे-கிருஷ்ணன், वत्सकान्-சிறிய கன்றுக்குட்டிகளை, चारयति-மேய்த்துக் கொண்டிருக்கும்பொழுது, तथा-அதுபோலவே, आर्यगोपेषु-பெரிய இடையர்கள், आरात्-தூரத்தில், वरगोष्ठेषु-சிறந்த மேய்ச்சல்தரைகளில், चारयत्सु च-மாடுகளை மேய்த்துக் கொண்டிருக்கும்பொழுதும், दूरात्- வெகு தூரத்திலிருந்து, वत्सं-கன்றை, निरीक्ष्य-உற்றுநோக்கி, स्नेहेन-அன்பால், सम्भ्रान्ताः-பரபரப்படைந்த, गावः-பசுக்கள், तदभिमुखं-அவைகளை நோக்கி, धावन्त्यः-ஓடுகின்றவைகளாயும், गोपैश्च-இடையர்களாலும், दुर्वाराः-தடுக்க முடியாதவைகளாயும்,

प्रययुः-சென்றன. प्रस्नवभरेण-பால் பெருக்கால், भूयः-அடிக்கடி, स्रुतस्तनाः-பாலைச்சொரிகின்ற மடியுடையவைகளாக, पूर्ववत्-முன்போலவே, वत्सान्-கன்றுகளை, प्राप्य-அடைந்து, तर्णकवत्योऽपि-வேறு கன்றுகளையுடையதாயிருந்தாலும் அப்பசுக்கள், पृथुरसनया-பெரிய நாவினால், लिहत्यः-நக்கிக் கொண்டு, प्रमुदा-மிகுந்த மகிழ்ச்சியுடன், अपाययन्-பாலூட்டச்செய்தன. गोपाः अपि-இடையர்களும், निजबालान्-தங்களுடைய பிள்ளைகளை, मूर्ध्नि आघ्राय-உச்சி முகர்ந்து, जगृहुः-வாரி எடுத்துக்கொண்டார்கள். इत्थं-இவ்வாறு, तेषां-அவர்களுக்கு, तत्र-அங்கு, अलौकिकलाभः-இம்மையில் கிடைப்பதற்கரிய லாபம், क्षणं-சிறிது நேரம், ववृधे-வளர்ந்தது.

ஒருநாள் யமுனைக்கரையில் ஸ்ரீ கிருஷ்ணன் கோபபாலகர்களுடன் கன்றுக்குட்டிகளை மேய்த்துக்கொண்டு இருந்தான். அப்பொழுது வயது முதிர்ந்த ஆயர்களும் வெகுதூரத்தில் மாடுகளை மேய்த்துக்கொண்டிருந்தனர். அப்பசுக்கள் வெகுதூரத்தில் தங்களுடைய கன்றுகளைக் கண்டவுடன் கனிவுடன் அவைகளிடம் விரைந்தன. ஆயர்கள் தடுத்தும் அவைகள் தயங்காமல் அக்கன்றுகளை அணுகிச் சென்றன. அந்தப் பசுமாடுகளுக்கு இந்தக் கன்றுகளுக்குப் பிறகு வேறு கன்றுகள் பிறந்துள்ள போதிலும் இவைகளிடம் அதிகமான வாஞ்சையினால் அவைகளின் மடிகளிலிருந்து பால் சொரிந்தது. அவைகள் தங்களது கன்றுகளை அடைந்து அவைகளை அன்புடன் தங்களுடைய நாவினால் நக்கிக்கொடுத்து மிகுந்த சந்தோஷத்துடன் பாலைக் குடிக்கச் செய்தன. அந்த ஆயர்களும் தம் தம் பிள்ளைகளைக் கண்டதும் வந்த கார்யத்தை மறந்து பிரீதி விசேஷத்தால் பிள்ளைகளைத் தழுவி உச்சி முகர்ந்து இன்புற்றனர். இவ்வாறு அந்தப் பசுக்களுக்கும் ஆயர்களுக்கும் இம்மையிலும் மறுமையிலும் கிடைக்கப் பெறாத ஒப்புயர்வற்ற ஆனந்தம் உண்டாயிற்று. (209-212)

गोपा वत्साश्चान्ये पूर्वं कृष्णात्मका ह्यभवन् ।
तेनात्मनः प्रियत्वं दर्शितमेतेषु कृष्णेन ॥ २१३ ॥

கோபா வத்ஸாச்சாந்யே பூர்வம் க்ருஷ்ணாத்மகா ஹ்யபவந் ।
தேநாத்மன: ப்ரியத்வம் தர்ஶிதமேதேஷு க்ருஷ்ணேன ॥

**पूर्वं**-முன்பு, **अन्ये**-வேருக இருந்த, **गोपाः**-கோபச்சிறுவர்களும், **वत्साः च**-கன்றுகளும், (இப்பொழுது), **कृष्णात्मका हि**-கிருஷ்ணரூபமாகவே, **अभवन्**-ஆய்விட்டன. **तेन**-அதனுல் **कृष्णेन**-கிருஷ்ணனுல், **एतेषु**-இவைகளில், **आत्मनः**-ஆத்மாவின் **प्रियत्वं**-பிரீதி, **दर्शितम्**-காட்டப்பட்டது.

முன்னுல் வேருக இருந்த அந்தக் கன்றுகளும் இடைச் சிறுவர்களும் இப்பொழுது கிருஷ்ண ரூபமாகவே ஆய் விட்டனர் இதனுல் உலகத்திற்கெல்லாம் ஆத்ம ரூபமான அவர்தான் மற்ற எல்லாப் பொருள்களைக்காட்டிலும் பிரிய மானவர் என்பது நன்கு புலப்படுகின்றது. (213)

[1]प्रेयः पुत्राद्वित्तात्प्रेयोऽन्यस्माच्च सर्वस्मात् ।
अन्तरतरं यदात्मेत्युपनिषदः सत्यताऽभिहिता ॥ २१४ ॥

ப்ரேய: புத்ராத் வித்தாத் ப்ரேயோऽந்யஸ்மாச்ச ஸர்வஸ்மாத் ।
அந்தரதரம் யதாத்மேத்யுபநிஷத: ஸத்யதாऽபிஹிதா ॥

**यत्**-எது, **पुत्रात्**-புதல்வனைக்காட்டிலும், **प्रेयः**-பிரியமானதோ, **वित्तात्**-செல்வத்தைக்காட்டிலும், **प्रेयः**-மிகவும் பிரியமானதோ, **अन्यस्मात् सर्वस्माच्च**-மற்ற எல்லாவற்றைக் காட்டிலும், **अन्तरतरं**-மிகச்சிறந்ததோ அதுதான், **आत्मा**-ஆத்மா, **इति**-என்ற, **उपनिषदः**-உபநிஷத்தின், **सत्यता**-தத்வம் **अभिहिता**-கூறப்பட்டுள்ளது.

இந்த நிகழ்ச்சியால் புதல்வன், செல்வம் மற்றுமுள்ள எல்லாப் பொருள்களைக்காட்டிலும் ஆத்மாதான் மிகவும் பிரியமான வஸ்து என்ற உபநிஷத்தின் தத்வம் நன்கு விளக்கப்படுகின்றது. (214)

---

1. तदेतत् प्रेयः पुत्रात्प्रेयो वित्तात्प्रेयोऽन्यस्मात्सर्वस्मादन्तरतरं यदयमात्मा —(பிருஹதாரண்யகம் 1-4-8)

ननूच्चावचभूतेष्वात्मा सम एव वर्ततेऽथ हरिः ।
दुर्योधनेऽर्जुने वा तरतमभावं कथं नु गतवान्सः ॥ २१५ ॥

நனூச்சாவசபூதேஷ்வாத்மா ஸம ஏவ வர்த்ததேZத ஹரி: ।
துர்யோதனேZர்ஜுனே வா தரதமபாவம்
கதம் நு கதவாந் ஸ: ॥

उच्चावचभूतेषु-உயர்வு, தாழ்வு என்ற வேற்றுமைகளை உடைய பிராணிகளிடத்தில், आत्मा-ஆத்மா, सम एव-ஸமமாகவே, वर्तते ननु-இருக்கிறதல்லவா, अथ-பின்னர், सः हरिः-அந்த கிருஷ்ணன், दुर्योधने-துர்யோதனனிடத்திலும், अर्जुने वा-அர்ஜுனனிடத்திலும், कथं-எப்படி, तरतमभावं-வெவ்வேறு தன்மையை, गतवान् नु-அடைந்தார்.

பிராணிகளின் சரீரங்களில் பலவித வேற்றுமைகள் காணப்படுகின்றன. ஆனாலும் எல்லா இடங்களிலும் ஆத்மா ஒரே மாதிரியாகவே இருக்கிறார். அவர் ஸ்வரூபத்தில் வேற்றுமை இல்லை என்று கூறப்படுகிறது. அப்படியிருக்க கிருஷ்ணன் ஆத்மாவாக இருப்பானேயாகில் துர்யோதனனிடமும் அர்ஜுனனிடமும் எவ்வாறு வேற்றுமை பாராட்டினார்? (215)

बधिरान्धपङ्गुमूकाः दीर्घाः खर्वाः सरूपाश्च ।
सर्वे विधिना दृष्टाः सवत्सगोपाश्चतुर्भुजास्तेन ॥ २१६ ॥

பதிராந்த பங்கு மூகா: தீர்க்கா: கர்வா: ஸரூபாச்ச ।
ஸர்வே விதினா த்ருஷ்டா: ஸவத்ஸ கோபாஸ்
சதுர்புஜாஸ்தேன ॥

बधिर-செவிடர், अन्ध-குருடர், पंगु-நொண்டி, मूकाः-ஊமையர்கள், दीर्घाः-உயரமானவர், खर्वाः-குட்டையானவர், सरूपाः-அழகியவர் இவ்வாறான, सवत्सगोपाः-கன்றுகளுடன் கூடிய இடையர்கள், सर्वे च-எல்லோரும், तेन विधिना-அந்தப் பிரம்மதேவனால், चतुर्भुजाः-நான்கு கைகளையுடைய விஷ்ணு ஸ்வரூபமாக, दृष्टाः-காணப்பட்டனர்.

செவிடன், குருடன், நொண்டி, ஊமையன், வளர்ந்தவன், குட்டையன், அழகுள்ளவன் என்ற பற்பல வித்யாஸங்களையுடைய இடையர்களையும் கன்றுக்குட்டிகளையும் பிரம்மதேவர் (பின்னால்) ஸ்ரீ கிருஷ்ணரூபமாகக் கண்டார். மற்றவர்கள் வேற்றுமையைப் பார்த்தார்கள். ஆகவே கிருஷ்ணர் யாவருக்கும் ஸமமாகத்தான் இருக்கிறார். அவருடைய உண்மை ஸ்வரூபத்தை அறிந்த அர்ஜுனாதியர் நன்மை பெறுகின்றனர். இதனை அறியாதவர் நன்மை பெறுவதில்லை. அவரவர்களுடைய மனதிலுள்ள குண தோஷங்களால் ஸமமாக இருக்கும் கிருஷ்ணனை வெவ்வேறாகப் பார்க்கின்றனர். (216)

[1]भूतसमत्वं नृहरेः समो हि मशकेन नागेन ।
लोकैस्समस्त्रिभिर्वेत्युपनिषदा भाषितं साक्षात् ॥ २१७ ॥

பூதஸமத்வம் ந்ருஹரே: ஸமோ ஹி மஶகேந நாகேன ।
லோகை: ஸமஸ்த்ரிபிர்வேத்யுபநிஷதா பாஷிதம் ஸாக்ஷாத் ॥

**मशकेन**-கொசுவுடனும், **नागेन**-யானையுடனும், **समः**-ஸமமானவர், **त्रिभिः- लोकैः वा**-மூன்று உலகங்களுடனும், **समः हि**-ஸமமானவர் அல்லவா, **इति**-என்று, **नृहरेः**-நரஸிம்மரூபத்தையுடைய பகவானுக்கு, **भूतसमत्वं**-எல்லாப் பிராணிகளிடத்தும் ஸமநிலை, **उपनिषदा**-உபநிஷத்தாலேயே, **साक्षात्**-நேராக, **भाषितं**-கூறப்பட்டுள்ளது.

யானையிடத்திலும், கொசுவிடத்திலும், மற்றுமுள்ள எல்லாப்பிராணிகளிடத்திலும் மூன்று உலகங்களிலும் பகவான் ஸமமாகவே நிலவுகிறார் என்று உபநிஷத்துகள் கூறுகின்றன. (217)

आत्मा तावदभोक्ता तथैव ननु वासुदेवश्चेत् ।
नानाकैतवयत्नैः पररमणीभिः कथं रमते ॥ २१८ ॥

---

1. समो मशकेन समो नागेन सम एभिस्त्रिभिर्लोकैः समोऽनेन सर्वेण
— (*பிருஹதாரண்யகம் 1-3-22*)

ஆத்மா தாவதபோக்தா ததைவ நநு வாஸுதேவச்சேத் |
நாநாகைதவ யத்நை: பரரமணீபி: கதம் ரமதே ||

**आत्मा तावत्**-ஆத்மாவோ எனில், **अभोक्ता**-போகத்தை அனுபவிக்காதவன் **ननु**-அல்லவா! **तथैव**-அப்படியே (அபோக்தாவாக), **वासुदेवः**-ஸ்ரீ கிருஷ்ணன், **चेत्**-இருப்பானுகில், **नानाकैतवयत्नैः**-பற்பல சூழ்ச்சிகளுடன்கூடிய முயற்சிகளால், **पररमणीभिः**-பிறர் மனைவியருடன், **कथं**-எவ்வாறு, **रमते**-போகத்தை யனுபவிக்கின்றூர்?

ஆத்மா போக்தாவல்லன் அல்லவா! ஸ்ரீ கிருஷ்ணன் பரமாத்மாவானுல் அவரும் அபோக்தாவாக இருக்கவேண்டுமே! அவ்விதம் இல்லையே! அக்கண்ணபிரான் பற்பல சூழ்ச்சிகளைச் செய்து ஆயர்குல மங்கையருடன் கூடி போகங்களை அநுபவித்தாரே! இது எப்படிப் பொருந்தும்? (218)

सुन्दरमभिनवरूपं कृष्णं दृष्ट्वा विमोहिता गोप्यः ।
तमभिलषन्त्यो मनसा कामाद्विरहव्यथां प्रापुः ॥ २१९ ॥

ஸுந்தரமபிநவரூபம் க்ருஷ்ணம் த்ருஷ்ட்வா
விமோஹிதா கோப்ய: |
தமபிலஷந்த்யோ மனஸா காமாத் விரஹ வ்யதாம் ப்ராபு: ||

**सुन्दरं**-அழகியவனும், **अभिनवरूपं**-புதிய தோற்றத்தை உடையவனுமான, **कृष्णं**-கிருஷ்ணனை, **दृष्ट्वा**-பார்த்து, **विमोहिताः**-மோஹமடைந்த, **गोप्यः**-கோபஸ்திரீகள், **मनसा**-மனதால், **तं**-அவனை, **अभिलषन्त्यः**-விரும்புகின்றவர்களாய், **कामात्**-ஆசையால், **विरहव्यथां**-விரஹவேதனையை, **प्रापुः**-அடைந்தார்கள்.

மிகவும் அழகியதும் அற்புதமானதுமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய ரூபத்தைக் கண்ட கோபியர் அவர் வசப்பட்டு அவரை விரும்பினர். அவரை அடைய முடியாமல் இருக்கும் பொழுது அவரது பிரிவாற்றுமையால் வருந்தினர். (219)

गच्छन्त्यस्तिष्ठन्त्यो गृहकृत्यपराश्च भुञ्जानाः ।
कृष्णं विनाऽन्यविषयं समक्षमपि जातु नाविन्दन् ॥ २२० ॥

க்ச்சந்த்யஸ் திஷ்டந்த்யோ க்ருஹக்ருத்ய பராச்ச புஞ்ஜாநா: ।
க்ருஷ்ணம் விநாऽன்ய விஷயம் ஸமக்ஷமபி ஜாது நாவிந்தன் ॥

गच्छन्त्यः-சென்றுகொண்டிருக்கும்பொழுதும், तिष्ठन्त्यः-நின்றுகொண்டிருக்கும்பொழுதும், गृहकृत्यपराश्च-வீட்டுவேலைகளில் ஈடுபட்டிருக்கும்பொழுதும், भुञ्जानाः-சாப்பிட்டுக்கொண்டிருக்கும்பொழுதும், कृष्णं विना-ஸ்ரீ கிருஷ்ணனைத் தவிர, अन्यविषयं-மற்ற பொருளை, समक्षमपि-கண்களுக்கு முன்தோன்றினும், जातु-ஒருபொழுதும், न अविन्दन्-அறிந்து கொள்ளவில்லை.

அம்மங்கையர் அல்லும் பகலும் கண்ணபிரானையே நினைத்துக்கொண்டிருந்தனர். அவர்கள் நடக்கும்பொழுதும், நிற்கும்பொழுதும், வீட்டு வேலைகளில் ஈடுபட்டிருக்கும்பொழுதும், சாப்பிட்டுக்கொண்டிருக்கும்பொழுதும் கண்ணனையே தியானம் செய்துவந்தனர். அவ்வாறு அவர்களுடைய மனம் கண்ணனிடத்தில் லயித்துவிட்டதால் அவர்கள் தங்கள் கண்களுக்கு முன் தோன்றும் மற்ற பொருள்களைப் பார்க்கவேயில்லை. (220)

दुःसहविरहभ्रान्त्या स्वपतीन्ददृशुस्तरून्नरांश्च पशून् ।
हरिरयमिति सुप्रीताः सरभसमालिङ्गयांचक्रुः ॥ २२१ ॥

துஸ்ஸஹ விரஹ ப்ராந்த்யா ஸ்வபதீந் தத்ருஶுஸ்
தரூன் நராம்ச்ச பஶூந் ।
ஹரிரயமிதி ஸுப்ரீதா: ஸரபஸமாலிங்கயாம்சக்ரு: ॥

दुःसह-தாங்கமுடியாத, विरह-பிரிவால் உண்டான, भ्रान्त्या-மயக்கத்தால், स्वपतीन्-தங்களுடைய கணவர்களையும், तरून्-மரங்களையும், नरान्-மனிதர்களையும், पशून् च-விலங்குகளையும், अयं हरिः-இவன் ஸ்ரீ கிருஷ்ணன், इति-என்று

ददृशुः-பார்த்தார்கள். (அதனால்) सुप्रीताः-மிகுந்த ஸந்தோஷமடைந்தவர்களாய், सरभसं-பரபரப்புடன், आलिङ्गयांचक्रुः-கட்டித்தழுவிக்கொண்டார்கள்.

அக்கோபியர்கள் ஸ்ரீ கிருஷ்ணனின் பிரிவாற்றுமையைத் தாங்கமாட்டாமல் மயக்கமடைந்தவர்களாய்த் தங்களுடைய கணவர்களையும், மரங்களையும் மனிதர்களையும் பசுக்களையும்கூட ஸ்ரீ கிருஷ்ணன் என்றே கருதி அன்பு மிகுதியால் இறுகத் தழுவி அகமகிழ்ந்தனர். (221)

कापि च कृष्णायन्ती कस्याश्चित्पूतनायन्त्याः ।
अपिबत्स्तनमिति साक्षाद्व्यासो नारायणः प्राह ॥ २२२ ॥

காऽபிச க்ருஷ்ணாயந்தீ கஸ்யாச்சித் பூதநாயந்த்யா: ।
அபிபத் ஸ்தநமிதி ஸாக்ஷாத் வ்யாஸோ நாராயண: ப்ராஹ॥

काऽपि-ஒருவள், कृष्णायन्ती-கிருஷ்ணனாக நடித்துக்கொண்டு, पूतनायन्त्याः-பூதனையாக நடிக்கும், कस्याश्चित्-ஒருவளுடைய, स्तनं-ஸ்தன்யத்தை, अपिबत्-பருகினாள், इति-என்று, साक्षात् व्यासः-வியாஸரூபியான, नारायणः-பகவான், प्राह-கூறுகிறார்.

"ஒரு கோபி தன்னையே ஸ்ரீ கிருஷ்ணனுகப் பாவித்துக்கொண்டாள். மற்றொரு கோபி பூதனைபோல் நடித்துக்கொண்டு அவனுக்கு ஸ்தன்யபானம் செய்விக்கவந்தாள். கிருஷ்ணனுக் நடிக்கின்ற கோபி அவளிடம் ஸ்தன்யபானம் செய்தாள். இவ்வாறுக கோபிகள் தங்களையே கண்ணன் எனக் கருதி அவனுடைய திருவிளையாடல்களை நடித்து மகிழ்ந்தனர்" இவ்வாறு வியாஸ பகவான் கூறியுள்ளார்.

तस्मान्निजनिजदयितान्कृष्णाकारान्व्रजस्त्रियो वीक्ष्य ।
स्वपरनृपतिपत्नीनामन्तर्यामी हरिः साक्षात् ॥ २२३ ॥

தஸ்மாந்நிஜ நிஜ தயிதான் க்ருஷ்ணாகாரான்
வ்ரஜஸ்த்ரியோ வீக்ஷ்ய ।
ஸ்வபர ந்ருபதி பத்நீநாமந்தர்யாமீ ஹரி: ஸாக்ஷாத் ॥

**तस्मात्**-ஆகையால், **व्रजस्त्रियः**-ஆயர்குல மங்கையர், **निजनिजदयिताम्**-தங்கள் தங்களுடைய கணவர்களை, **कृष्णाकाराम्**-ஸ்ரீ கிருஷ்ணரூபமாக, **वीक्ष्य**-பார்த்து ஆனந்த மடைந்தனர். **स्वपरनृपातिपत्नीनाम्**-தங்களுக்கும் பிறருக்கும், அரசமனைவிகளுக்கும், **साक्षात् हरिः**-ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவே, **अन्तर्यामी**-உள்ளே உறைபவர்.

ஆயர்குலத்தில் வசிக்கும் கோபிகைகள் அனைவரும் தங்கள் தங்களுடைய கணவரைக் கண்ணபிரானாகவே கண்டு ஆனந்தமடைந்தனர். தியான முதிர்ச்சியால் தங்கள் கணவரும் அவர்களுக்குக் கிருஷ்ணராகவே தோன்றினர். எல்லா பிராணிகளிடமும் அந்தர்யாமியாக இருப்பவர் கிருஷ்ணனே அல்லவா! ஆகவே எல்லோருக்கும் ஆத்மாவாக விளங்கும் கிருஷ்ண ஸ்வரூபத்தை எங்கும் கண்டு கோபிகைகள் ஆனந்தமடைந்தனரே தவிர இதில் கிருஷ்ணபரமாத்மாவுக்குச் சிறிதும் போகம் கிடையாது (223)

**परमार्थतो विचारे गुडतन्मधुरत्वदृष्टान्तात् ।**
**नश्वरमपि नरदेहं परमात्माकारतां याति ॥ २२४ ॥**

**किं पुनरनन्तशक्तेर्लीलावपुरीश्वरस्येह ।**
**कर्माण्यलौकिकानि स्वमायया विदधतो नृहरेः ॥ २२५ ॥**

பரமார்த்ததோ விசாரே குட தன்மதுரத்வ த்ருஷ்டாந்தாத் ।
நஸ்வரமபி நரதேஹம் பரமாத்மாகாரதாம் யாதி ॥

கிம் புனரனந்தஸக்தேர் லீலாவபுரீச்வரஸ்யேஹ ।
கர்மாண்யலௌகிகாநி ஸ்வமாயயா விதததோ ந்ருஹரே: ॥

**परमार्थतः**-உண்மையாக, **विचारे**-விசாரணை செய்து பார்த்தால், **गुड**-வெல்லமும், **तन्मधुरत्व**-அதனுடைய இனிப்பும், **दृष्टान्तात्**-என்ற உதாஹரணத்தால், **नश्वरमपि**-அழியக் கூடியதாக இருப்பினும், **नरदेहं**-மனிதனுடைய சரீரம் **परमात्माकारतां**-பரமாத்மாவினுடைய ஸ்வரூபத்தை, **याति**-அடைகிறது.

(அவ்விதமிருக்க) अनन्तशक्तेः-எல்லையற்ற வன்மை வாய்ந்தவரும், ईश्वरस्य-உலகை அடக்கியாள்கின்றவரும், स्वमायया-தன்னுடைய மாயையால், अलौकिकानि कर्माणि-செயற்கரிய செயல்களை, इह-இங்கு, विदधतः-செய்கின்றவருமான, नृहरेः-நரசிம்மனுடைய, लीलावपुः-லீலாமானுஷ விக்ரஹம் பரமாத்மரூபமானது என்பதைப்பற்றி, किं पुनः-கூறவும் வேண்டுமா ?

வாஸ்தவத்தில் நன்கு ஆராய்ந்து பார்த்தோமானால் உலகில் காணும் எல்லாம் பரமாத்ம ஸ்வரூபம்தான். அவரைத்தவிற வேறு ஒன்றும் கிடையாது. வெல்லமும் அதில் காணும் இனிப்பும் பிரிக்க முடியாதபடி சேர்ந்து உள்ளது. வெல்லத்திலிருந்து இனிப்பைத் தனியாகப் பிரித்துக்காட்ட முடியுமா ? வெல்லம் முழுவதும் இனிப்புத் தான். அதுபோலவே அழியக்கூடிய ஸாதாரண மனிதனுடைய சரீரமும் பரமாத்ம ஸ்வரூபம்தான். அப்படியிருக்க ஈசுவரனுடைய சரீரம் பரமாத்ம ரூபம் என்பதைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா ? அவர் அளவுகடந்த சக்தி வாய்ந்தவர். அவரே உலகெல்லாவற்றையும் அடக்கி ஆட்சிபுரிகின்றார். அவர் உலகத்தோரால் செய்ய முடியாத அரிய செயல்களைத் தன்னுடைய மாயாசக்தியால் செய்பவர். உலகைக் காக்கப் பற்பல ரூபங்களுடன் அவதரிக்கிறார். அச்சமயம் தன் ஸங்கல்பத்தால் தன் இஷ்டப்படி விளையாட்டாக சரீரத்தை தரித்துக்கொள்கிறார். அந்த சரீரம் பரமாத்ம ஸ்வரூபம்தான் என்பதில் என்ன ஸந்தேஹம் ? இந்த சரீரத்தைக் கண்டு கோபிகைகள் ஆனந்தமெய்தினர்.

(அ) பிரபஞ்சம் முழுவதும் ஈசுவர ஸ்வரூபம் என்பதைக் காட்டுகிறார் :—

मृद्भक्षणेन कुपितां विकसितवदनां स्वमातरं वक्त्रे ।
विश्वमदर्शयदखिलं किं पुनरथ विश्वरूपोऽसौ ॥ २२६ ॥

ம்ருத்பக்ஷணேன குபிதாம் விகஸிதவதனாம் ஸ்வமாதரம் வக்த்ரே ।
விஶ்வமதர்ஶயதகிலம் கிம்புனரத விஶ்வரூபோऽஸௌ ॥

मृद्भक्षणेन-மண்ணைச் சாப்பிட்டதால், कुपिता-கோபம் கொண்டவளும், विकासितवदना-(பிறகு) மலர்ந்த முகத்தை உடையவளுமான, स्वमातरं-தன்னுடைய தாயாருக்கு, वक्त्रे-(தன்னுடைய) வாயில், विश्वं अखिलं-உலகம் முழுவதையும், अदर्शयत्-காண்பித்தார். अथ-பிறகு, किं पुनः--சொல்வானேன்? असौ-அவர், विश्वरूपः-பிரபஞ்சத்தையே உருவமாகக்கொண்டவர்.

ஒருசமயம் தன்னுடைய அண்ணனாகிய பலராமனுடன் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது குழந்தையாகிய கண்ணன் மண்ணைத்தின்ன அதைப் பலராமன் யசோதை இடம் சென்று தெரிவித்தான். அதைக் கேட்டுச் சினங்கொண்ட யசோதை கண்ணனைக் கட்டி இழுத்து வந்து மண்ணைத் தின்றது உண்மையா என வினவக் கண்ணனும் "அது பொய், என்னுடைய வாயைப்பார்த்து உண்மையைத் தெரிந்துகொள்" என்று கூறித் தன் திருவாயைத் திறந்தார். அப்பொழுது அக்கண்ணனின் தாயார், உலகமனைத்தும் அக்கண்ணனுடைய வாய்க்குள் உரைந்து நிற்பதைக் கண்டு வியப்படைந்தாள். இதனால் உலகனைத்தும் பரமாத்ம ஸ்வரூபம் என்பது தெரிகிறது.



## १९. आनुग्रहिकप्रकरणम् ॥

(அ) கிருஷ்ணன் பரமாத்மாதான், அவரே நிர்குண வஸ்து என்பதைப் பல காரணங்களால் காட்டி, இதில் உண்டாகும் ஆக்ஷேபங்களுக்கெல்லாம் ஸமாதானம் கூறி விட்டு, இனி கிருஷ்ணபரமாத்மாவினிடம் பக்தி நிலைபெறுவதற்காக, உலகத்தோரைக் காக்க அவர் செய்த பல லீலைகளை எடுத்துக்கூறுகிறார். அதில் முதலாவதாக இந்த சுலோகத்தில் பூதனா மோக்ஷ லீலையை வர்ணிக்கிறார் :—

**विषविषमस्तनयुगलं पाययितुं पूतना गृहं प्राप्ता ।**
**तस्याः पृथुभाग्याया आसीत्कृष्णार्पणो देहः ॥ २२७ ॥**

## 19. ஆநுக்ரஹிக ப்ரகரணம்.

விஷ விஷம ஸ்தன யுகலம் பாயயிதும் பூதநா
க்ருஹம் ப்ராப்தா ।
தஸ்யா: ப்ருது பாக்யாயா ஆஸீத் க்ருஷ்ணார்ப்பணோ தேஹ: ॥

**विष**–விஷத்தால், **विषम**–கடுமையான, **स्तनयुगलं**–இரு கொங்கைகளையும், **पाययितुं**–பருகச்செய்ய, **पूतना**–பூதனை, **गृहं**–வீட்டை, **प्राप्ता**–அடைந்தாள். **पृथुभाग्यायाः**-மிகுந்த பாக்யம் வாய்ந்த, **तस्याः**-அவளுடைய, **देहः**-உடல், **कृष्णार्पणः**-கண்ணனுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டதாக, **आसीत्**–ஆயிற்று.

பூதனை கண்ணனைக் கொல்வதற்காகக் கம்ஸனால் ஏவப்பட்ட ஓர் அரக்கி. அவள் தன்னுடைய இரு கொங்கைகளையும் விஷமுடையதாகச் செய்துகொண்டு அவ்விஷம் கலந்த ஸ்தன்யத்தைப் பருகச்செய்து கண்ணனைக் கொல்வதற்காக அவனுடைய வீட்டிற்குச் சென்றாள். ஆனால் அவளுடைய உடல் முழுவதும் கிருஷ்ணனுக்கே அர்ப்பணம் செய்யப்பட்டுவிட்டது. அதனால் அவள் மிகுந்த பாக்யசாலி.

(ஆ) சகடபஞ்ஜனத்தையும் த்ருணாவர்த்த வதத்தையும் கூறுகிறார் :—

अनयत्पृथुतरशकटं निजनिकटं वा कृतापराधमपि ।
कण्ठाश्लेषविशेषादवधीद्बाल्येऽसुरं कृष्णः ॥ २२८ ॥

அநயத் ப்ருதுதர ஶகடம் நிஜ நிகடம் வா க்ருதாபராதமபி ।
கண்டாஶ்லேஷ விஶேஷாதவதீத் பால்யேऽஸுரம் க்ருஷ்ண: ॥

**कृष्णः**-கிருஷ்ணன், **बाल्ये**-குழந்தைப் பருவத்தில், **कृतापराधम् अपि**-குற்றம்செய்தபோதிலும், **पृथुतरशकटं**-மிகப் பெரிய வண்டி உருக்கொண்ட அரக்கனை, **निजनिकटं**-தன்னுடைய பக்கத்திற்கு, **अनयत्**-அழைத்துக்கொண்டார் **कण्ठाश्लेषविशेषात्**-கழுத்தைக்கட்டிக்கொள்வதென்ற சிறந்த முறையால், **असुरं**-த்ருணாவர்த்தாஸுரனை, **अवधीत्**-கொன்றார்.

கம்ஸன் கண்ணனைக் கொல்ல ஒரு அஸுரனை அனுப்பினான். அவன் ஒரு பெரிய வண்டியைப்போல் உருவந்தாங்கிக் கண்ணனிடம் வந்தான். அவன் தீங்கு செய்தபோதிலும் குழந்தையான அக்கண்ணன் அவனைக் கொன்று தம் ஸாயுஜ்யத்தையே கொடுத்துவிட்டார். மற்றுமோர் ஸமயம் புயல்காற்று உருவத்துடன் வந்த த்ருணாவர்த்தன் என்ற அஸுரனைக் கழுத்தில் இறுகத் தழுவிக்கொண்டே அவனைக் கொன்றுவிட்டார். (228)

यमलार्जुनौ तरू उन्मूल्योलूखलगतश्चिरं खिन्नौ ।
रिङ्गन्नङ्गणभूमौ स्वमालयं प्रापयन्नृहरिः ॥ २२९ ॥

யமலார்ஜுனௌ தரூ உன்மூல்யோலூகல
கதச்சிரம் கின்னௌ ।
ரிங்கன்னங்கணபூமௌ ஸ்வமாலயம் ப்ராபயந் ந்ருஹரி: ॥

**उलूखलगतः**-உரலில் கட்டுண்ட, **नृहरिः**-பரமாத்மா, **अङ्गणभूमौ**-முற்றத்தின் தரையில், **रिङ्गन्**-தவழ்ந்துகொண்டு, **चिरं**-வெகுகாலமாக, **खिन्नौ**-வருந்திக்கொண்டிருந்த, **यमलार्जुनौ तरू**-இரண்டு மருத மரங்களை, **उन्मूल्य**-வேறுடன் பிடுங்கி,

स्वं आलयं-தன்னுடைய இருப்பிடத்திற்கு, प्रापयत् - அனுப்பி வைத்தார்.

நலகூபரன் மணிக்ரீவன் என்ற இரு கந்தர்வர்கள் சாபத்தால் மருத மரங்களாக ஆகி நீண்ட காலம் வருந்திக் கொண்டிருந்தனர். ஒரு நாள் உரலில் கட்டப்பட்ட கண்ணன் அந்த இரு மரங்களுக்கும் இடையே தவழ்ந்து சென்று அவ்விரண்டு மரங்களையும் வேருடன் கீழே சாய்த்தான். அப்பொழுது அவ்விருவரும் தங்கள் சாபம் நீங்கப்பெற்று வைகுண்டத்தை அடைந்தனர். (229)

नित्यं त्रिदशद्वेषी येन च मृत्योर्वशीकृतः केशी ।
काकः कोऽपि वराको बकोऽप्यशोकं गतो लोकम् ॥ २३० ॥

நித்யம் த்ரிதஶத்வேஷீ யேந ச ம்ருத்யோர் வஶீக்ருத: கேஶீ ।
காக: கோऽபி வராக: பகோऽப்யஶோகம் கதோ லோகம் ॥

येन-எவரால், नित्यं-எப்பொழுதும், त्रिदशद्वेषी-தேவர்களை வெறுக்கின்ற, केशी-கேசீ என்ற அரக்கனும், वराकः-இகழத் தக்க, कोऽपि काकः-ஒரு காக்கையும், बकः अपि-கொக்கும் मृत्योः-சாவுக்கு, वशीकृतः-வசமாகச் செய்யப்பட்டு, अशोकं-துன்பமற்ற, लोकं-உலகத்திற்கு, गतः-சென்றனரோ.

மேலும் கிருஷ்ணனைக் கொல்லுவதற்காகப் பல அரக்கர்கள் பல உருவங்களைத் தாங்கி வந்தனர். அவ்வாறு வந்த கேசி, காகாசுரன், பகாஸுரன் முதலியவர்களைக் கொன்று மிகக் கருணை வாய்ந்த கண்ணபிரான் அவர்களை மோக்ஷமடையச் செய்தார். (230)

गोगोपीगोपानां निकरमहिं पीडयन्तमतिवेगात् ।
अनघमघासुरमकरोत्पृथुतरमुरगेश्वरं भगवान् ॥ २३१ ॥

கோகோபீ கோபாநாம் நிகரமஹிம் பீடயந்தமதிவேகாத் ।
அநகமகாஸுரமகரோத் ப்ருதுதரமுரகேச்வரம் பகவாந் ॥

**गोगोपीगोपानां**-பசுக்கள், இடைச்சிகள், இடையர்கள் இவர்களுடைய, **निकरं**-கூட்டத்தை, **अतिवेगात्**-மிகவும் வேகமாக, **पीडयन्तं**-துன்புறுத்துகின்ற, **उरगेश्वरं**-பாம்புகளுக்குத் தலைவனான, **पृथुतरं**-மிகப்பெரிய, **अहिं**-பாம்பான, **अघासुरं**-அகன் என்ற அரக்கனை, **भगवान्**-கண்ணபிரான், **अनघं**-பாபமற்றவனாக, **अकरोत्**-செய்தார்.

மேலும் அகன் என்ற அஸுரன் ஒரு பெரிய பாம்பின் உருவத்தையுடையவனாக பசுக்களுக்கும் இடையர்களுக்கும் அவர்களுடைய பெண்களுக்கும் பற்பல இன்னல்களைச் செய்து வந்தான். ஸ்ரீ கிருஷ்ணன் மிகப் பெரிய உருக் கொண்ட அவ்வரக்கனைக் கொன்று அவனைப் பாபம் நீங்கியவனாகச் செய்தார். (231)

**पीत्वाऽरण्यहुताशनमसह्यतत्तेजसो हेतोः ।**
**दग्धान्मुग्धानखिलाञ्जुगोप गोपान्कृपासिन्धुः ॥ २३२ ॥**

*பீத்வாऽரண்ய ஹுதாசனமஸஹ்ய தத்தேஜஸோ ஹேதோ: ।*
*தக்தான் முக்தானகிலான் ஜுகோப கோபான் க்ருபா ஸிந்து:॥*

**कृपासिन्धुः**-கருணைக்கடலாகிய ஸ்ரீ கிருஷ்ணன், **अरण्यहुताशनं**-காட்டுத்தீயை, **पीत्वा**-குடித்து, **असह्य**-தாங்கமுடியாத **तत्तेजसः हेतोः**-அதனுடைய ஜ்வாலையின் காரணமாக, **दग्धान्**-கொளுத்தப்பட்ட, **मुग्धान्**-குற்றமற்ற, **अखिलान्**-எல்லா, **गोपान्**-இடையர்களையும், **जुगोप**-காத்தருளினார்.

ஒரு ஸமயம் கோபர்கள் காட்டில் தங்களுடைய மாடுகளை மேய்த்துக்கொண்டிருக்கும்பொழுது காட்டுத்தீ கிளம்பி எங்கும் பரவி வந்துவிட்டது. கடுமையான அத்தீயினுடைய ஜ்வாலையால் இடையர்கள் வாட்டப்பட்டனர். கருணைக்கடலான கண்ணபிரான் அத்தீயைப் பருகி இடையர்களைக் காத்து அருளினார். (232)

**पातुं गोकुलमाकुलमशनिततिद्दूषणैः कृष्णः ।**
**असहाय एकहस्ते गोवर्धनमुद्दधारोच्चैः ॥ २३३ ॥**

பாதும் கோகுலமாகுலமஶநி தடித் வர்ஷணை: க்ருஷ்ண: ।
அஸஹாய ஏக ஹஸ்தே கோவர்த்தன முத்ததாரோச்சை: ॥

कृष्णः-கிருஷ்ணன், अशनि-இடி, तटित्-மின்னல், वर्षणैः-மழை இவைகளால், आकुलं-துயரமடைந்த, गोकुलं-ஆயர்பாடியை, पातु-காப்பதற்காக, असहायः-உதவியின்றி, एकहस्ते-ஒரே கையில், उच्चैः-உயரமாக, गोवर्धनं-கோவர்த்தனம் என்ற மலையை, उद्दधार-தூக்கிப்பிடித்தார்.

ஒருஸமயம் கோபர்கள் கண்ணன் சொல்படி இந்திர விழாக் கொண்டாடுவதை விடுத்துக் கோவர்த்தன மலையைப் போற்றி வணங்கினர். அதுகண்டு சினங்கொண்ட தேவேந்திரன் கார்மேகங்களை அனுப்பி ஆயர்பாடியை அழிக்கும்படி கட்டளையிட்டான். அவைகளும் இடி, மின்னல், மழை முதலியவற்ருல் ஆயர்குலத்தை அழிக்க முயன்றன. அதனுல் ஆயர்கள் இன்னலுறக் கருணைநிதியான கண்ணபிரான் ஒருவருடைய உதவியுமின்றி கோவர்த்தன மலையைத் தன்னுடைய ஒரு கையால் உயரத் தூக்கிக் குடையாகப்பிடித்து கோகுலத்தைக் காத்தருளினுர்.

वासोलोभाकलितं धावद्रजकं शिलातले हत्वा ।
विस्मृत्य तदपराधं विकुण्ठवासोऽर्पितस्तस्मै ॥ २३४ ॥

வாஸோ லோபாகலிதம் தாவத்ரஜகம் ஶிலாதலே ஹத்வா ।
விஸ்ம்ருத்ய ததபராதம் விகுண்ட வாஸோऽர்பிதஸ் தஸ்மை॥

वासोलोभाकलितं - ஆடைகளில் பேராசையுடன் கூடிய, धावद्रजकं-துணிகளை வெளுக்கும் வண்ணானை, शिलातले-கல்தரையில், हत्वा-கொன்று, तदपराधं-அவனுடைய குற்றத்தை, विस्मृत्य-மறந்து, तस्मै-அவனுக்கு, विकुण्ठवासः-வைகுண்டவாஸம், अर्पितः-அளிக்கப்பட்டது.

கிருஷ்ணபரமாத்மா தனுர்யாகத்திற்காகக் கம்ஸனுல் வரவழைக்கப்பட்டு மதுராநகரம் வந்து வீதியில் செல்லும் பொழுது கம்ஸனுக்காகச் சிறந்த ஆடைகளை எடுத்துச்

சென்று கொண்டிருக்கும் வண்ணுனைக் கண்டு கிருஷ்ணன் தனக்கு ஆடைகள் தருப்படி கேட்கவே துஷ்டனுன அந்த வண்ணுன் இகழ்ந்து பேசினுன். உடனே அந்த இடத்தி லேயே அவனைக் கொன்று தலை தரையில் புரளும்படி செய் தார். இகழ்ந்து பேசிய குற்றத்தை மறந்து அவனுக்கு வைகுண்டவாஸத்தையே அளித்தார். (234)

त्रेधा वक्रशरीरामतिलम्बोष्ठीं स्खलद्वपुर्वचनाम् ।
स्रक्चन्दनपरितोषात्कुब्जामृज्वाननामकरोत् ॥ २३५ ॥

த்ரேதா வக்ர ஶரீராமதிலம்போஷ்டீம் ஸ்கலத் வபுர்வசநாம் ।
ஸ்ரக்சந்தன பரிதோஷாத் குப்ஜாம் ருஜ்வாநநாமகரோத் ॥

त्रेधा-மூன்று விதமாக, वक्रशरीरां-கோணலுள்ள சரீரத்தையுடையவளாயும், अतिलम्बोष्ठीं-மிகவும் தொங்கு கின்ற உதட்டையுடையவளாயும், स्खलद्वपुर्वचनां-உடலிலும் பேச்சிலும் நடுக்கம் கொண்டவளுமான, कुब्जां-கூனியை, स्रक्चन्दनपरितोषात्-மாலை சந்தனம் கொடுத்ததாலுண்டான ஆனந்தத்தால், ऋज्वाननां-நேரான முகத்தையுடையவளாக, अकरोत्-கிருஷ்ணன் செய்தான்.

கண்ணன் வீதியில் சென்றுகொண்டிருக்கையில் ஒரு கூனி தென்பட்டாள். அவள் கம்ஸனுக்காக வாஸனைத் திரவ்யங்களை எடுத்துச் சென்றுகொண்டிருந்தாள். அவளுடைய உடல் முக்கோணல்கள் உள்ளதாக இருந்தது. அவளுடைய உதடு தொங்கிக்கொண்டிருந்தது. அவள் சரீரம் நடுங்கிக்கொண்டிருந்தது. பேச்சிலும் நடுக்கம் காணப்பட்டது. அவள் கண்ணனைக் கண்டவுடன் இன் சொற்களால் வரவேற்று சந்தனம், புஷ்பமாலை இவைகளைக் கொடுத்து உபசரித்தாள். அதனுல் அகமகிழ்ந்த அக் கண்ணன் அவள் சரீரத்திலுள்ள கோணல்களை நீக்கி அவளைச் சிறந்த அழகுவாய்ந்தவளாகச் செய்தான். (235)

निहतः पपात हरिणा हरिचरणाग्रेण कुवलयापीडः ।
तुङ्गोन्मत्तमतङ्गः पतङ्गवद्दीपकस्याग्रे ॥ २३६ ॥

நிஹத: பபாத ஹரிணா ஹரிசரணாக்ரேண குவலயாபீட:।
துங்கோந்மத்த மதங்க: பதங்கவத் தீபகஸ்யாக்ரே ॥

**दीपकस्य**-விளக்கின், **अग्रे**-முன்னால், **पतङ्गवत्**-விட்டில் பூச்சிபோல, **हरिणा**-விஷ்ணுவால், **हरिचरणाग्रेण**-தன்னுடைய மெல்லிய காலின் நுனியால், **कुवलयापीडः**-குவலயாபீடமென்று பெயர்கொண்ட, **तुङ्गोन्मत्तमतङ्गः**-உயரமான மதம் கொண்ட யானை, **निहतः**-கொல்லப்பட்டு, **पपात**-விழுந்தது.

கண்ணனைக் கொல்வதற்காகக் கம்ஸன் குவலயாபீடம் என்ற மதங்கொண்ட யானையை ஏவினான். அதுவும் மிகுந்த ஆவேசத்துடன் கண்ணனைத் தாக்கிற்று. ஆனால் கண்ணனுடைய மெல்லிய காலின் நுனியால் உதைக்கப்பட்டு அந்த யானை கீழே விழுந்து இறந்தது.

**युद्धमिषात्सह रङ्गे श्रीरङ्गेणाङ्गसंगमं प्राप्य ।**
**मुष्टिकचाणूराख्यौ ययतुर्निःश्रेयसं सपदि ॥ २३७ ॥**

யுத்த மிஷாத் ஸஹ ரங்கே ஸ்ரீரங்கேணாங்கஸங்கமம் ப்ராப்ய।
முஷ்டிக சாணூராக்யௌ யயதுர் நி:ச்ரேயஸம் ஸபதி ॥

**रङ्गे**-மல்ல அரங்கில், **श्रीरङ्गेण सह**-கண்ணபிரானுடன், **युद्धमिषात्**-மல்ல யுத்தம் என்னும் வியாஜத்தினால், **अङ्गसंगमं**-பகவானின் அங்கஸ்பர்சத்தை, **प्राप्य**-அடைந்து, **सपदि**-உடனேயே, **मुष्टिकचाणूराख्यौ**-முஷ்டிகன், சாணூரன் என்று பெயர்கொண்ட இருமல்லர்கள், **निःश्रेयसं**-மோக்ஷத்தை, **ययतुः**-அடைந்தனர்.

கண்ணனைக் கொல்லுவதன்பொருட்டு கம்ஸனால் ஏவப்பட்ட முஷ்டிகன், சாணூரன் என்ற இரு மாபெரும் மல்லர்கள் அவனை மல்ல அரங்கில் சந்தித்தனர். அவர்கள் மல்ல யுத்த வ்யாஜத்தால் கண்ணபிரானின் சரீரத்தைக் கட்டித் தழுவினர். பிறகு அவ்விருவரும் அவனால் கொல்லப்பட்டனர். கண்ணபிரானின் அங்கஸ்பர்சம் பெற்றதால் அவ்விருவரும் மோக்ஷத்தையடைந்தனர். (237)

देहकृतादपराधाद्वैकुण्ठोत्कण्ठितान्तरात्मानम् ।
यदुवरकुलावतंसः कंसं विध्वंसयामास ॥ २३८ ॥

தேஹக்ருதாதபராதாத் வைகுண்டோத்-
கண்டிதாந்தராத்மாநம் ।
யதுவரகுலாவதம்ஸ: கம்ஸம் வித்வம்ஸயாமாஸ ॥

यदुवरकुलावतंसः–சிறந்த யாதவ குலத்திற்கு அணிகலமான கண்ணன், वैकुण्ठोत्कण्ठित–வைகுண்டம் செல்வதில் ஆவல்கொண்ட, अन्तरात्मानं-மனதையுடைய, कंसं-கம்ஸனை, देहकृतात्–சரீரத்தால் செய்யப்பட்ட, अपराधात्-குற்றத்தால், विध्वंसयामास–கொன்ருர்.

கம்ஸனின் மனம் வைகுண்ட லோகத்திற்குச் செல்ல வேண்டுமென்று மிகவும் ஆசைப்பட்டுக்கொண்டிருந்தது. ஆனுல் அவனுடைய சரீரம் கிருஷ்ணனுக்குத் தீங்கிழைத்துக்கொண்டிருந்தது. அதனுல் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அவனுடைய சரீரத்தை நாசம் செய்து அவனை வைகுண்ட லோகத்திற்கு அனுப்பிவைத்தார். (238)

हरिसंदर्शनयोगात्पृथुरणतीर्थे निमज्जते तस्मै ।
भगवान्नु प्रादाद्यः सद्यश्चैद्याय सायुज्यम् ॥ २३९ ॥

ஹரிஸந்தர்ஶநயோகாத் ப்ருதுரண தீர்த்தே
நிமஜ்ஜதே தஸ்மை ।
பகவாந்நு ப்ராதாத் ய: ஸத்யச்சைத்யாய ஸாயுஜ்யம் ॥

हरिसन्दर्शनयोगात् – விஷ்ணு தர்சனம் சேர்ந்ததால், पृथु–பெரிய, रण-யுத்தமாகிய, तीर्थे–புண்ய தீர்த்தத்தில், निमज्जते–மூழ்குகின்ற, तस्मै चैद्याय–அந்த சிசுபாலனுக்கு, यः भगवान्–எந்த ஸ்ரீ க்ருஷ்ணபரமாத்மா, सद्यः–உடனேயே, सायुज्यम् –ஸாயுஜ்யத்தை, प्रादात् नु–அளித்தாரல்லவா !

பரமாத்மாவை அடையவேண்டுமென்பதற்காகச் சிசுபாலன் க்ருஷ்ணனுடன் சண்டைசெய்தான். அங்கு அவ

னுக்கு கிருஷ்ணதர்சனம் கிடைத்ததாலும், யுத்தம் என்ற புண்ய தீர்த்தத்தில் மூழ்கியதாலும் அவனுக்கு விஷ்ணு ஸாயுஜ்யம் கிடைத்தது. (239)

**मीनादिभिरवतारैर्निहताः सुरविद्विषो बहवः ।**
**नीतास्ते निजरूपं तत्र च मोक्षस्य का वार्ता ॥ २४० ॥**

*மீனாதிபிரவதாரைர் நிஹதா: ஸுரவித்விஷோ பஹவ: ।*
*நீதாஸ்தே நிஜரூபம் தத்ர ச மோக்ஷஸ்ய கா வார்த்தா ॥*

**मीनादिभिः**–மீன் முதலிய, **अवतारैः**–அவதாரங்களினால், **बहवः**–பல, **सुरविद्विषः**–அரக்கர்கள், **निहताः**-கொல்லப்பட்டார்கள். **ते**–அவர்கள், **निजरूपं**–தன்னுடைய ஸ்வரூபத்தையே **नीताः**–அடையும்படி செய்யப்பட்டனர். **तत्र**–அங்கு, **मोक्षस्य**–மோக்ஷத்திற்கு, **का वार्ता**–பேச்சு எதற்காக?

மேலும் மத்ஸ்யம், கூர்மம் முதலிய பல அவதாரங்களை எடுத்து பகவான் அநேக அரக்கர்களை அழித்திருக்கிறார். அவ்வாறு பகவானால் கொல்லப்பட்ட அரக்கர்கள் யாவரும் பகவானுடைய ஸாயுஜ்யத்தைப் பெற்றிருக்கிறார்கள். அவர்கள் பகவத் ஸ்வரூபத்துடனேயே ஒன்றிவிட்டபின் மோக்ஷமடைந்தனர் என்று கூறவா வேண்டும்? (240)

**ये यदुनन्दननिहतास्ते तु न भूयः पुनर्भवं प्रापुः ।**
**तस्मादवताराणामन्तर्यामी प्रवर्तकः कृष्णः ॥ २४१ ॥**

*யே யதுநந்தன நிஹதாஸ் தே து ந பூய: புநர்பவம் ப்ராபு: ।*
*தஸ்மாதவதாராணாமந்தர்யாமீ ப்ரவர்தக: க்ருஷ்ண: ॥*

**ये**-எவர்கள், **यदुनन्दननिहताः**-யதுகுலத்தை மகிழ்விக்கும் கண்ணபிரானால் கொல்லப்பட்டனரோ, **ते तु**–அவர்களோவெனில், **भूयः**–மறுபடியும், **पुनर्भवं**–மறுபிறவியை, **न प्रापुः**–அடையவில்லை. **तस्मात्**–ஆகையால், **अवताराणां**-அவதாரங்களுக்கு, **प्रवर्तकः**-காரணமானவன், **अन्तर्यामी**–எல்லோருக்குள்ளும் நிறைந்து நிற்கும், **कृष्णः**–கண்ணபிரான்.

கண்ணபிரானால் கொல்லப்பட்ட அரக்கர்களனைவரும் மறுபடியும் பிறவியை அடையவில்லை. அதனால் பகவான் தான் அவர்களை அவ்வாறு ஸம்ஹரித்து அவர்களுக்கு மோக்ஷத்தையளித்திருக்க வேண்டும். இல்லாவிடில் ஸாதாரண முறையில் இறக்கின்றவர்களோ அல்லது கொல்லப்படுகின்றவர்களோ மறு பிறவியைக் கட்டாயம் அடைவார்கள்: இது தவிர்க்க முடியாதது. ஆகையால் கிருஷ்ணரூபத்தில் அவதரித்தவன் ஸாக்ஷாத் பரமாத்மாவே. அவனே எல்லா அவதாரங்களுக்கும் காரணம். (241)

ब्रह्माण्डानि बहूनि पङ्कजभवान्प्रत्यण्डमत्यद्भुता-
न्गोपान्वत्सयुतानदर्शयदजं विष्णूनशेषांश्च यः ।
शंभुर्यच्चरणोदकं स्वशिरसा धत्ते च मूर्तित्रया-
त्कृष्णो वै पृथगस्ति कोऽप्यविकृतः सच्चिन्मयो नीलिमा ॥

ப்ரஹ்மாண்டாநி பஹூநி பங்கஜபவான்
ப்ரத்யண்டமத்யத்புதான்
கோபான் வத்ஸயுதாநதர்ஶயதஜம்
விஷ்ணூனஶேஷாம்ஶ்ச யஃ ।
ஶம்புர் யச்சரணோதகம் ஸ்வஶிரஸா
தத்தே ச மூர்த்தி த்ரயாத்
க்ருஷ்ணோ வை ப்ருதகஸ்தி கோऽப்யவிக்ருதஃ
ஸச்சின்மயோ நீலிமா ॥

यः—எந்தப் பரமாத்மா, बहूनि—பல, ब्रह्माण्डानि-பிரம்மாண்டங்களையும், प्रत्यण्डं—ஒவ்வொரு அண்டத்திலும், अत्यद्भुतान्—மிகவும் அதிசயமான, पङ्कजभवान्-பிரம்மாக்களையும், वत्सयुतान्—கன்றுக்குட்டிகளுடன் கூடிய, गोपान्—ஆயர்களையும், अशेषान् विष्णूंश्च-எல்லா விஷ்ணுக்களையும், अजं-பிரம்மதேவருக்கு, अदर्शयत्—காண்பித்தாரோ, शम्भुः—பரமசிவன், यच्चरणोदकं—எவருடைய பாதங்களிலிருந்து கிளம்பிய கங்கா ஜலத்தை, स्वशिरसा—தன்னுடைய சிரஸ்ஸால், धत्ते—தாங்குகிறாரோ (இதனால்), कृष्णः—கிருஷ்ணர்,

मूर्तित्रयात् -மூன்று மூர்த்திகளைக்காட்டிலும், पृथक्-வேறாக வும், अविकृतः-மாறுபாடு அற்றவராயும், सच्चिन्मयः-ஸச்சிதா னந்தஸ்வரூபியாயும், नीलिमा-நீல நிறமாகவும், कोऽपि-வர்ணிக்கமுடியாதவராகவும், अस्ति-இருக்கிறார்.

கிருஷ்ணனுடன் கூட இருக்கும் கோபர்களையும், கன்றுகளையும் அவருக்குத் தெரியாமல் எடுத்துச்சென்று குஹையில் மறைத்து வைத்துவிட்டுத் திரும்பிவந்த பிரம்ம தேவருக்கு அநேகம் ப்ரஹ்மாண்டங்களையும், ஒவ்வொரு பிரஹ்மாண்டத்திலும் வேறொரு ப்ரஹ்மா, விஷ்ணு, கன்று கள், கோபர்கள் இவர்கள் எல்லோரையும் கிருஷ்ணன் காட்டினார். இதைக்கண்டு பிரம்மதேவர் திகைத்து மயங்கிப் போனார். இந்த கிருஷ்ணனுடைய திருப்பாதத்திலிருந்து கிளம்பிய கங்கையை ஈச்வரன் சிரஸ்ஸில் தாங்குகிறார். ஆதலால் கிருஷ்ணன் மும்மூர்த்திகளுக்கும் மேற்பட்டவர். விகாரமற்றவர். நீலவர்ணரான அவர் ஸ்வரூபத்தை எடுத்துக்கூற முடியாது. இவர் ஸச்சிதானந்த ஸ்வரூபி யான பரமாத்மா. (242)



कृपापात्रं यस्य त्रिपुररिपुरम्भोजवसतिः
सुता जह्नोः पूता चरणनखनिर्णेजनजलम् ।
प्रदानं वा यस्य त्रिभुवनपतित्वं विभुरपि
निदानं सोऽस्माकं जयति कुलदेवो यदुपतिः ॥ २४३ ॥

க்ருபா பாத்ரம் யஸ்ய த்ரிபுர ரிபுரம்போஜ வஸதிः
ஸுதா ஜஹ்நோः பூதா சரண நக நிர்ணேஜண ஜலம் ।
ப்ரதானம் வா யஸ்ய த்ரிபுவன பதித்வம் விபுரபி
நிதானம் ஸோऽஸ்மாகம் ஜயதி குலதேவோ யதுபதிः ॥

त्रिपुररिपुः-திரிபுர ஸம்ஹாரம் செய்த பரமேச்வரனும், अम्भोजवसतिः-தாமரையை இருப்பிடமாகக்கொண்ட பிரம்ம தேவரும், यस्य-எவருடைய, कृपापात्रं-தயவுக்குப் பாத்திர மானவர்களோ; यस्य-எவருடைய, चरणनख-கால்விரல்களை, निर्णेजन-கழுவும், जलं-தண்ணீர், पूता-புனிதமான, जह्नोः

सुता-ஜஹ்னு முனிவரின் பெண்ணாகிய கங்காதேவியோ; यस्य-எவருடைய, प्रदानं-கொடை, त्रिभुवनपतित्वं-மூவுலகங்களுக்கும் பதியாகும் தன்மையோ, विभुः अपि-எங்கும் வியாபித்துள்ளபோதிலும், निदानं-ஜகத்காரண வஸ்துவாயும், अस्माकं-எங்களுடைய, कुलदेवः-குல தைவமுமான, सः-அந்த, यदुपतिः-யதுநாயகனான ஸ்ரீ கிருஷ்ணன், जयति-வெற்றியுடன் விளங்குகிறான்.

எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளே கண்ணனாகத் தோன்றுகிறான். அவனே திரிபுரனை ஸம்ஹரித்த பரமேச்வரனுக்கும் தாமரையில் அமர்ந்துள்ள பிரம்மதேவனுக்கும் கருணைகாட்டுகிறான். அவனுடைய பாதங்களைக் கழுவும் ஜலமே மிகப் புனிதம்வாய்ந்த கங்கா நதியாக ஓடுகிறது. அவன் தம் பக்தர்களுக்கு த்ரிலோகாதிபத்யத்தையே கொடுத்துவிடுகிறான். அப்பரம்பொருளே உலகத்தைப் படைப்பதற்குக் காரண வஸ்து. அந்த யாதவகுலத் திலகனான கண்ணபிரானே எமது குலதெய்வமாக விளங்குகிறான். (243)

(அ) கிருஷ்ணனைத் தாயாகவும் தன்னைக் குழந்தையாகவும் உருவகப்படுத்தி முறையிடுகிறார்:—

मायाहस्तेऽर्पयित्वा भरणकृतिकृते मोहमूलोद्भवं मां
मातः कृष्णाभिधाने चिरसमयमुदासीनभावं गताऽसि ।
कारुण्यैकाधिवासे सकृदपि वदनं नेक्षसे त्वं मदीयं
तत्सर्वज्ञे न कर्तुं प्रभवति भवती किं नु मूलस्य शान्तिम् ॥

மாயா ஹஸ்தேऽர்பயித்வா பரணக்ருதிக்ருதே
மோஹமூலோத்பவம் மாம்
மாத: க்ருஷ்ணாபிதானே சிர ஸமயமுதாஸீன பாவம்
கதாऽஸி ।
காருண்யைகாதிவாஸே ஸக்ருதபி வதனம்
நேக்ஷஸே த்வம் மதீயம்
தத்ஸர்வக்ஞே ந கர்த்தும் ப்ரபவதி பவதீ
கிம்நு மூலஸ்ய சாந்திம் ॥

कृष्णाभिधाने-கிருஷ்ணன் என்ற பெயருள்ள, मातः-ஏ தாயே! मोहमूलोद्भवं-மோஹம் என்ற காரணத்தால் உண்டாகிய, मां-என்னை, भरणकृतिकृते-வளர்ப்பதென்ற கார்யத்தின்பொருட்டு, मायाहस्ते-மாயாதேவியின் கையில், अर्पयित्वा-கொடுத்துவிட்டு, चिरसमयं-வெகுகாலமாக, उदासीनभावं-கவனிக்காமல் இருக்கும் தன்மையை, गता असि-அடைந்திருக்கிறாயே! कारुण्यैकाधिवासे-கருணைக்கு ஒரே உறைவிடமானவளே! त्वं-நீ, मदीयं-என்னுடைய, वदनं-முகத்தை, सकृत् अपि-ஒருதடவைகூட, न ईक्षसे-பார்க்கிறதில்லையே. तत्-ஆகையால், सर्वज्ञे-அனைத்தையும் அறிந்தவளே, भवती-தாங்கள், मूलस्य-(பிறவிக்குக்) காரணமாகிய அஞ்ஞானத்தின், शान्तिं-சாந்தியை, कर्तुं-செய்வதற்கு, न प्रभवति किंनु-சக்தியற்றவளா என்ன?

கிருஷ்ணன் என்ற பெயருடைய ஹே தாயே! நான் அஞ்ஞானமென்ற மூல காரணத்தால் பிறந்திருக்கிறேன். அவ்வாறு பிறந்த என்னை வளர்க்க மாயை என்னும் மாற்றாந்தாயிடம் நீர் அர்ப்பணம் செய்துவிட்டீர் வெகுகாலமாயும் நீர் என்னை கவனிக்கவே இல்லை. கருணைக் களஞ்சியமே! எல்லாமறிந்த எம்பெருமானே! நீர் என்னுடைய முகத்தை ஒருதடவை கூடப் பார்க்கவில்லையே நீர் எல்லாமறிந்தவர் எல்லாவல்லமையும் நிறைந்தவர். நானோ அஞ்ஞானம் என்ற காரிருளில் அகப்பட்டுக்கொண்டு அல்லல்படுகின்றேன். என்னுடைய பிறவிக்குக்காரணமாகிய இந்த அஞ்ஞானமென்ற இருளை அகற்றத் தங்களால் இயலாதா? ஆதலால் இந்த அஞ்ஞானமென்ற இருளை நீக்கி என்னை ஆட்கொள்ளும். அஞ்ஞானம் நீங்கப்பெறின் மோக்ஷநிலை கிட்டும் என்பது கருத்து. (244)

(அ) பகவானைத் தந்தையாகக் கூப்பிட்டு வேண்டுகிறார்:—

उदासीनः स्तब्धः सततमगुणः सङ्गरहितो
भवांस्तातः काऽतः परमिह भवेज्जीवनगतिः।

अकस्मादस्माकं यदि न कुरुते स्नेहमथ त-
द्वसस्व स्वीयान्तर्विमलजठरेऽस्मिन्पुनरपि ॥ २४५ ॥

உதாஸீந: ஸ்தப்த: ஸததமகுணஸ்ஸங்கரஹித:
பவாம்ஸ்தாத: காऽத: பரமிஹ பவேத் ஜீவனகதி: ।
அகஸ்மாதஸ்மாகம் யதி ந குருதே ஸ்நேஹமத தத்
வஸஸ்வ ஸ்வீயாந்தர் விமலஜடரேऽஸ்மின் புநரபி ॥

उदासीनः(நான்) ஒதுங்கியிருப்பவன், सततं-எப்பொழுதும் स्तब्धः-கர்வமுள்ளவன், अगुणः-குணங்களற்றவன், सङ्गरहितः-ஸத்ஸங்கமில்லாதவன். तातः-தந்தையான, भवान्-தாங்கள், अकस्मात्-காரணமில்லாமலேயே திடீரென்று, अस्माकं-எங்களுக்கு, स्नेहं-பிரீதியை, न कुरुते यदि-செய்யாமல் போனால், अतः परं-இனிமேல், इह-இங்கு, जीवनगतिः-வாழ்க்கையில் ஸத்கதி, का-என்ன, भवेत्-உண்டாகும்? तत्-ஆகையால், पुनरपि-மறுபடியும், स्वीयान्तर्विमलजठरे-தன்னுடைய பரிசுத்தமான வயிற்றுக்குள் இருக்கும், अस्मिन्-இந்த என்னிடம், वसस्व-வாஸம் செய்யும்.

கிருஷ்ணா, என்னிடம் பல குற்றங்கள் உள்ளன. நான் செய்யவேண்டிய கடமையைச் செய்யாமல் ஒதுங்கியிருக்கிறேன். விநயமில்லாதவன். நற்குணங்களற்றவன். பெரியோர்களின் ஸங்கமும் இல்லை. இவ்விதமிருந்தாலும் தாங்கள் எனக்குத் தந்தையாயிருப்பதால் தனயனை என்னிடம் பித்ரு வாத்ஸல்யத்தைக் காண்பித்து அருள் செய்தால்தான் நான் கடைத்தேறமுடியும். இல்லாவிட்டால் நான் எவ்வாறு ஸத்கதி அடைய முடியும்? ஆகையால் தங்கள் வயிற்றிற்குள்ளிருக்கும் என் மனதில் வாஸம்செய்து என்னைத் தூய்மையாக்கி அருளவேண்டும். (245)

लोकाधीशे त्वयीशे किमिति भवभवा वेदना स्वाश्रितानां
संकोचः पङ्कजानां किमिह समुदिते मण्डले चण्डरश्मेः ।
भोगः पूर्वार्जितानां भवति भुवि नृणां कर्मणां चेदवश्यं
तन्मे दृष्टैर्नृपुष्टैर्ननु दनुजनृपैरूर्जितं निर्जितं ते ॥ २४६ ॥

லோகாதீசே த்வயீசே கிமிதி பவபவா
வேதநா ஸ்வாச்ரிதாநாம்
ஸங்கோச: பங்கஜாநாம் கிமிஹ ஸமுதிதே
மண்டலே சண்டரச்மே: ।
போக: பூர்வார்ஜிதாநாம் பவதி புவி ந்ருணாம்
கர்மணாம் சேதவச்யம்
தன்மே த்ருஷ்டைர் ந்ருபுஷ்டைர் நனு
தனுஜந்ருபைரூர்ஜிதம் நிர்ஜிதம் தே ॥

**ईशे**-ஈசுவரனுன, **त्वयि**-நீங்கள், **लोकाधीशे**-உலகங்களை ஆட்சிபுரியும்பொழுது, **स्वाश्रितानां**-தங்களை அண்டியவர்களுக்கு, **भवभवा**-பிறவியால் உண்டாகும், **वेदना**-துயரம், **किमिति**-ஏன்? **चण्डरश्मेः**-வெப்பமான கதிர்களுள்ள சூரியனுடைய, **मण्डले**-மண்டலம், **समुदिते**-நன்ருக உதித்தவுடன், **इह**-இங்கு, **पङ्कजानां**-தாமரைகளுக்கு, **संकोचः**-மலர்ச்சியின்மை **किं**-ஏன்? **भुवि**-உலகில், **नृणां**-மனிதர்களுக்கு, **पूर्वार्जितानां**-முன் ஜன்மத்தில் சேமித்துவைக்கப்பட்ட, **कर्मणां**-வினைகளின், **भोगः**-அனுபவம், **अवश्यं**-கட்டாயம், **भवति चेत्**-இருக்குமாகில், **मे**-என்ருல், **दृष्टैः**-காணப்பட்ட, **नृपुष्टैः**-மனித உருவத்துடன் வளர்ந்த, **दनुजनृपैः**-அஸுரராஜர்களால், **ते**-உம்முடைய, **तत्**-அந்த நியதி, **ऊर्जितं**-நிச்சயமாக, **निर्जितं**-ஜயிக்கப்பட்டுவிட்டதே.

ஈசுவரனுன தாங்கள் உலகங்கள் எல்லாவற்றிற்கும் காப்பாளனுக விளங்கும்பொழுது தங்களிடம் சரண்புகுந்தவர்களுக்குப் பிறவித்துன்பம் எங்ஙனம் ஏற்படும்? சூரியன் தன்னுடைய வெப்பமான கிரணங்களைப் பரப்பிக்கொண்டு உதிக்கையில் தாமரை எவ்வாறு மலராமல் இருக்கும்? "மானிடர்கள் தங்களுடைய வினைப்பயனை அனுபவித்தே தீரவேண்டும். அதை நான் போக்க முடியாது" என்று நீங்கள் சொல்லவும் முடியாது. மனித உருவத்தில் பிறந்த அரசர்களான துஷ்ட அஸுரர்கள் எத்தனையோ பிறவிகளில் எவ்வளவோ பாபங்கள் செய்தபோதிலும், அவர்கள் எல்லாப் பாபங்களும் விலகி உம்முடைய ஸாயுஜ்யத்தை

அடைந்திருக்கின்றனரே. தான் செய்த வினைகளை அனுபவிக்கத்தான் வேண்டும் என்ற நியதியை அவர்கள் மீறிவிட்டனரே. ஆகையால் தங்களை அண்டியவர்களுக்குப் பிறவித்துன்பம் இருப்பது நியாயமே இல்லை. (246)

(அ) தன் மனதை சாதகபக்ஷியாகக் கருதி அதற்கு உபதேசம் கூறுகிறார் :—

नित्यानन्दसुधानिधेरधिगतः सन्नीलमेघः सता-
मौत्कण्ठ्यप्रबलप्रभञ्जनभरैराकर्षितो वर्षति ।
विज्ञानामृतमद्भुतं निजवचोधाराभिरारादिदं
चेतश्चातक चेन्न वाञ्छसि तृषाक्रान्तोऽपि सुप्तोऽसि किम् ॥

நித்யாநந்த ஸுதாநிதேரதிகத: ஸந்நீலமேக: ஸதாம்
ஔத்கண்ட்ய ப்ரபல ப்ரபஞ்ஜன பரைராகர்ஷிதோ வர்ஷதி ।
விஞ்ஞாநாம்ருதமத்புதம் நிஜவசோ தாராபிராராதிதம்
சேதச்சாதக சேத் ந வாஞ்சஸி த்ருஷாக்ராந்தோZபி
ஸுப்தோZஸி கிம் ॥

चेतश्चातक-மனமாகிய சாதகப்பட்சியே! नित्यानन्दसुधानिधेः-நித்யாநந்தமாகிய அமிருதக்கடலிலிருந்து, अधिगतः-கிளம்பிய, सन्नीलमेघः-ஸத்ரூபமான நீலமேகம், सतां-நல்லவர்களுடைய, औत्कण्ठ्य-பேராவலாகிய, प्रबल-மிகுந்த பலமுள்ள, प्रभञ्जनभरैः-காற்றுக் கூட்டங்களால், आकर्षितः-இழுக்கப்பட்டு, आरात्-எங்கும், निजवचोधाराभिः-தன்னுடைய சொற்பொழிவாகிய தாரைகளால், इदं-இந்த, अद्भुतं-ஆச்சர்யமான, विज्ञानामृतं-ஆத்மஞானமாகிய அமுதத்தை, वर्षति-பொழிகின்றது. तृषाक्रान्तोऽपि-தாகத்தால் பீடிக்கப்பட்டும்கூட, न वाञ्छसि चेत्-நீ விரும்பாவிடில், सुप्तः असि किम्-தூங்குகிறாயா என்ன?

அழிவற்ற ஆனந்தம் என்னும் அமிருதஸாகரத்திலிருந்து கிளம்பிய ஸத்ரூபமான கிருஷ்ணன் என்ற நீலமேகம் ஸாதுக்களின் பக்தியாகிய காற்றினால் இழுக்கப்

பட்டு தன் உபதேசம் என்னும் தாரைகளால் விக்ஞானம் என்ற ஆச்சர்யமான அமிருதத்தை எங்கும் வர்ஷிக்கிறது. ஹே மனமாகிய சாதகமே! நீ தாஹத்துடன் கூடியிருந்தும் அதைப் பருகாமல் இருக்கிருயே. நீ தூங்குகிருயா என்ன? அமிருத ஸமுத்திரத்திலிருந்து ஓர் நீருண்ட மேகம் கிளம்பி காற்றினுல் இழுக்கப்பட்டு அமிருதத்தையே தாரை தாரை யாகப் பொழியுமானுல் மேகத்திலிருந்து வரும் நீரையே பருகும் ஸ்வபாவமுள்ள சாதகபக்ஷி தாகத்தால் துன்பப் பட்டுக்கொண்டு தூங்கிக்கொண்டிருக்குமா? அதுபோல பக்தர்களால் வேண்டப்பட்டு நித்யானந்தமே, நெய் கெட்டி யாவதுபோல் கிருஷ்ண உருவத்துடன் வந்து கீதோபதேசம் முதலியவைமூலம் ஆத்மஞானத்தைத் தரும்பொழுது தாப த்ரயங்களால் துன்புறும் மனம் அதைப் பெற முயற்சிக்க வேண்டும். (247)

चेतश्चञ्चलतां विहाय पुरतः संधाय कोटिद्वयं
तत्रैकत्र निधेहि सर्वविषयानन्यत्र च श्रीपतिम् ।
विश्रान्तिर्हितमप्यहो क्व नु तयोर्मध्ये तदालोच्यतां
युक्त्या वानुभवेन यत्र परमानन्दश्च तत्सेव्यताम् ॥

சேதச்சஞ்சலதாம் விஹாய புரத: ஸந்தாய கோடி த்வயம்
தத்ரைகத்ர நிதேஹி ஸர்வ விஷயாநந்யத்ர ச ஸ்ரீபதிம் ।
விச்ராந்திர் ஹிதமப்யஹோ க்வ நு தயோர் மத்யே
தததாலோச்யதாம்
யுக்த்யா வாऽனுபவேன யத்ர பரமானந்தஶ்ச
தத் ஸேவ்யதாம் ॥

चेतः-ஏ மனமே, चञ्चलतां-நிலையற்ற தன்மையை, विहाय-விட்டுவிட்டு, पुरतः-முன்னுல், कोटिद्वयं-இரு கோடிகளை सन्धाय சேர்த்து, तत्र-அதில், एकत्र-ஒருமுனையில், सर्वविषयान्-எல்லாப்பொருள்களையும், अन्यत्र-மற்றொரு முனையில் श्रीपतिं च-லக்ஷ்மீபதியான பரம்பொருளையும், निधेहि-வைப்பாயாக, तयोः - அவ்விரண்டுகளின் मध्ये - நடுவில், विश्रान्तिः-ஓய்வும், हितं अपि-நன்மையும், क्व नु-எங்கு உள்ளது,

**तत्**-அது, **आलोच्यताम्**-நன்கு பரிசீலிக்கப்படட்டும். **युक्त्या**-யுக்தியினுலோ, **अनुभवेन वा**-அல்லது அனுபவத்தினுலோ, **यत्र**-எங்கு, **परमानन्दः**-மிகுந்த ஆனந்தமுண்டாகிறதோ, **तत्**-அது, **सेव्यताम्**-ஸேவிக்கப்படட்டும்.

மனமே! விஷயங்களை நோக்கி ஓடும் ஸ்வபாவத்தை விட்டுவிட்டு முன்னுல் தராஸின் இரண்டு முனைகளிலும் இரண்டு தட்டுகளைக் கல்பனம் செய்துகொண்டு அவற்றுள் ஒன்றில் உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும், மற்றென்றில் லக்ஷ்மீபதியான பரம்பொருளையும் வைத்து எடைபோட்டுப்பார். அவற்றுள் எதனுல் அமைதியும் நித்யானந்தமும் கிடைக்கிறது என்று யோசனை செய்வாயாக. எதனுல் உனக்கு நன்மை ஏற்படுகிறது என்று தகுந்த சான்றுகளாலும் அனுபவத்தாலும் அறிந்து கொண்டு அதனைப் பின்பற்றுவாயாக. (248)

पुत्रान्पौत्रमथ स्त्रियोऽन्ययुवतीर्वित्तान्यथोऽन्यद्धनं
भोज्यादिष्वपि तारतम्यवशतो नालं समुत्कण्ठया ।
नैतादृग्यदुनायके समुदिते चेतस्यनन्ते विभौ
सान्द्रानन्दसुधार्णवे विहरति स्वैरं यतो निर्भयम् ॥

புத்ரான் பௌத்ரமத ஸ்த்ரியோऽந்ய யுவதீர்
வித்தாந்யதோऽந்யத் தனம்
போஜ்யாதிஷ்வபி தாரதம்ய வஶதோ நாலம்
ஸமுத்கண்டயா।
நைதாத்ருக் யது நாயகே ஸமுதிதே சேதஸ்யனந்தே விபௌ
ஸாந்த்ரானந்த ஸுதார்ணவே விஹரதி ஸ்வைரம்
யதோ நிர்பயம் ॥

**पुत्रान्**-பிள்ளைகளையும், **पौत्रं**-பேரனையும், **अथ**-பிறகு, **स्त्रियः**-தன் ஸ்திரீகளையும், **अन्ययुवतीः**-பிற ஸ்திரீகளையும், **वित्तानि**-தன் செல்வங்களையும், **अथो**-பிறகு, **अन्यत् धनं**-மற்ற பணத்தையும், **भोज्यादिषु अपि**-சாப்பிடும் பொருள்களிலும், **तारतम्यवशतः**-ஏற்றத்தாழ்வு இருப்பதால், **समुत्कण्ठया**-ஆசை

வைப்பதால், न अलम्-அவை போதுமானவையல்ல, अनन्ते-முடிவற்றவனுயும், सान्द्रानन्दसुधार्णवे-பேரானந்தக் கடலாயும் विभौ-எங்கும் நிறைந்துள்ளவனுயும் உள்ள, यदुनायके-கிருஷ்ணன், चेतसि-மனதில், समुदिते-தோன்றி, स्वैरं-தன்னிஷ்டம்போல், विहरति-விளையாடும்பொழுது, नैतादृक्-இம்மாதிரி நிலைமை ஏற்படுவதில்லை. यतः-ஏனெனில் (அப்பொழுது), निर्भयम्-பயமில்லாமல் இருக்கிருன்.

மக்கள், பேரன்மார்கள், பெண்கள், செல்வங்கள், மற்றுமுள்ள உணவுப் பொருள்கள் முதலியவற்றில் பற்றுதல் கொள்ளவேண்டாம். இவைகளெல்லாம் எல்லோரிடத்திலும் ஸமமாக இருப்பதில்லை. ஏற்றத் தாழ்வு உள்ளவை. ஆகவே எவ்வளவு கிடைத்தாலும் மேலும் ஆசையை வளர்க்குமே தவிற அவைகளால் ஒருபொழுதும் திருப்தி உண்டாகாது. எங்கும் நிறைந்தவரும், முடிவற்றவரும், பேரானந்தக்கடலும் யதுநாயகனுமான பரம்பொருள் உள்ளத்தில் தோன்றி தன்னிஷ்டப்படி விஹாரம் செய்வானேயாஞல், அவன் ஆசை அடங்கி திருப்தனுக ஆய்விடுவான். பயமே அவனுக்கு ஏற்படாது. (249)

काम्योपासनयार्थयन्त्यनुदिनं किंचित्फलं स्वेप्सितं
किंचित्स्वर्गमथापवर्गमपरैर्योगादियज्ञादिभिः ।
अस्माकं यदुनन्दनाङ्घ्रियुगलध्यानावधानार्थिनां
किं लोकेन दमेन किं नृपतिना स्वर्गापवर्गैश्च किम् ॥

காம்யோபாஸநயாऽர்த்தயந்த்யனுதினம்
கிஞ்சித் பலம் ஸ்வேப்ஸிதம்
கிஞ்சித் ஸ்வர்க்கமதாபவர்க்கமபரைர் யோகாதி யஞ்ஞாதிபி:।
அஸ்மாகம் யதுநந்தநாங்க்ரி யுகல த்யானுவதானுர்த்திநும்
கிம் லோகேந தமேந கிம் ந்ருபதிநா
ஸ்வர்க்காபவர்க்கைச்ச கிம் ॥

काम्योपासनया-பயனை விரும்பிச்செய்யும் உபாஸனையால் स्वेप्सितं-தங்களுக்குப் பிரியமான, किंचित् फलं-சிறிய பயனை,

अनुदिनं - ஒவ்வொருநாளும், अर्थयन्ति - வேண்டுகின்றனர். अपरैः-மற்ற, योगादियज्ञादिभिः-யோகம் முதலியவற்ருலும், யக்ஞம் முதலியவற்ருலும், किंचित्-அல்பமான, स्वर्ग-ஸ்வர்கத்தையோ, अथ-அல்லது, अपवर्ग-முக்தியையோ, अर्थयन्ति-விரும்புகின்றனர். यदुनन्दन-யதுகுமாரனுகிய கண்ணபிரானுடைய, अंघ्रियुगल-இரண்டு பாதங்களையும், ध्यान-தியானம் செய்தல் என்ற, अवधानार्थिनां-ஈடுபாட்டை விரும்புகின்ற, अस्माकं-எங்களுக்கு, लोकेन किम्-லோகத்தால் என்ன பயன்? दमेन किं-அடக்கத்தால் யாது பயன்? नृपतिना-அரசனுலும், स्वर्गापवर्गैश्च-ஸ்வர்க்கம், மோக்ஷம் இவைகளாலும், किम्-என்ன பயன்?

சிலர் பயன்களை விரும்பி அதற்குரிய உபாஸனைகளைச் செய்து அந்த அல்பப் பயனை ஆர்வத்துடன் அனுபவிக்கின்றனர். வேறு சிலர் யோகம், யாகம் முதலியவற்றைச் செய்து ஸ்வர்க்கம், முக்தி முதலிய சுகத்தை விரும்புகின்றனர். ஆனல் யாதவகுல திலகனுகிய ஸ்ரீ கிருஷ்ணனுடைய பாதபத்மங்களையே தியானம் செய்வதென்ற வ்ரதம் பூண்ட யாம் மற்ற உலகங்கள், அதற்குரிய புலனடக்கம், இம்மையில் அரசனைப்பேணுதல், மறுமையில் ஸ்வர்க்கம், மோக்ஷம் முதலியவற்றுள் ஒன்றையும் விரும்புகிருேமில்லை. (250)

आश्रितमात्रं पुरुषं स्वाभिमुखं कर्षति श्रीशः ।
लोहमपि चुम्बकाश्मा संमुखमात्रं जडं यद्वत् ॥ २५१ ॥

ஆஶ்ரிதமாத்ரம் புருஷம் ஸ்வாபிமுகம் கர்ஷதி ச்ரீஶ: ।
லோஹமபி சும்பகாஶ்மா ஸம்முகமாத்ரம் ஜடம் யத்வத் ॥

चुम्बकाश्मा-காந்தக்கல், संमुखमात्रं-தனக்கு நேராக மட்டும் இருக்கின்ற, लोहं-இரும்பை, जडमपि-செயலற்றதாயிருந்தாலும், यद्वत्-எவ்வாறு, कर्षति-இழுக்கிறதோ, तद्वत्-அதுபோல், श्रीशः-லக்ஷ்மீபதியும், आश्रितमात्रं पुरुषं-தன்னை வந்து அடைந்த மனிதனை மட்டும், स्वाभिमुखं-தனக்கு நேராக, कर्षति-இழுத்துக்கொள்கிருர்.

காந்தம் எதிரிலிருக்கும் இரும்பை மட்டும், அது ஜடமாயிருந்தாலும் தன்னிடத்தில் இழுத்துக்கொள்கிறது. அதுபோல லக்ஷ்மீநாயகரான ஸ்ரீமஹாவிஷ்ணுவும் தன்னை அண்டியவரை மட்டும் தனக்கு நேராக இழுத்துக்கொள்கிருர். (251)

अयमुत्तमोऽयमधमो जात्या रूपेण संपदा वयसा ।
श्लाघ्योऽश्लाघ्यो वेत्थं न वेत्ति भगवाननुग्रहावसरे ॥

அயமுத்தமோzயமதமோ ஜாத்யா ரூபேண
ஸம்பதா வயஸா
ச்லாக்யோzச்லாக்யோ வேத்தம் ந வேத்தி
பகவாநநுக்ரஹாவஸரே ॥

भगवान् - பகவான், अनुग्रहावसरे-அருள்புரியும் ஸமயத்தில், अयं-இவன், जात्या-பிறப்பினுலும், रूपेण-தோற்றத்தினுலும், संपदा-செல்வத்தினுலும், वयसा-வயதினுலும், उत्तमः-சிறந்தவன், अयं-இவன், अधमः-தாழ்ந்தவன், अयं-இவன், श्लाघ्यः-புகழத்தக்கவன், अयं अश्लाघ्यः - இவன் புகழத்தகாதவன், इत्थं-இவ்வாறு, न वेत्ति-அறிகிறதில்லை.

அந்த பகவான் அருள்புரியும்பொழுது ஒருவன் பிறப்பினுலும், அழகினுலும், செல்வத்தாலும், வயதாலும் உயர்ந்தவன்; மற்ருெருவன் இவைகளால் தாழ்ந்தவன், ஒருவன் புகழத்தக்கவன், மற்றவன் புகழத்தகாதவன் என்று வேற்றுமை காட்டுவதில்லை. இவைகளை நினைப்பதே இல்லை. அவர் எல்லோருக்கும் ஸமமாகவே அருள் புரிகின்ருர். (252)

अन्तःस्थभावभोक्ता ततोऽन्तरात्मा महामेघः ।
खदिरश्चम्पक इति वा प्रवर्षणे किं विचारयति ॥ २५३ ॥

அந்தஸ்த பாவ போக்தா ததோzந்தராத்மா மஹாமேக: ।
கதிரச்சம்பக இதி வா ப்ரவர்ஷணே கிம் விசாரயதி ॥

ततः-ஆகையால், अन्तरात्मा-எல்லோருடைய மனதிற்குள்ளும் உரையும் அந்த பரமாத்மா, अन्तःस्थभावभोक्ता-மனதிலுள்ள எண்ணத்தையறிந்து பலன் தருபவர், महामेघः-பெரிய மேகம், प्रवर्षणे-மழை பொழியும்பொழுது, खदिरः-கருங்காலி, इति-என்றோ, चम्पको वा-சம்பகம் என்றோ, किं विचारयति-யோசிக்கிறதா ?

நீருண்ட காளமேகம் தன்னுடைய நீரை தாரை தாரையாக வர்ஷிக்கின்றது. அப்பொழுது கருங்காலி போன்ற மரங்களும் சம்பகம் போன்ற நறுமணமுள்ள மலர்களைத் தரும் செடி கொடிகளும் அந்த நீரைப் பெறுகின்றன. ஆனால் மேகம், இது கருங்காலி என்றோ, இது சம்பகம் என்றோ யோசிப்பதில்லை அதுபோல் நீலமேகஶ்யாமள ரூபனும் எல்லோருடைய உள்ளத்திலும் வசிக்கின்றவனும் உள்ள பரமாத்மா எல்லோருடைய மனதிலும் உள்ள எண்ணங்களை நன்கு தெரிந்துகொண்டு அதை அனுஸரித்து தன்னுடைய அருளாகிய மழையை வர்ஷிக்கின்றார். வெளித்தோற்றங்களை அவர் கவனிப்பதில்லை. (253)

यद्यपि सर्वत्र समस्तथापि नृहरिस्तथाप्येते ।
भक्ताः परमानन्दे रमन्ति सदयावलोकेन ॥ २५४ ॥

யத்யபி ஸர்வத்ர ஸமஸ்ததாபி ந்ருஹரிஸ் ததாzப்யேதே ।
பக்தா: பரமானந்தே ரமந்தி ஸதயாவலோகேந ॥

नृहरिः-நரஸிம்மரூபியான பகவான், सर्वत्र-எல்லா இடங்களிலும், यद्यपि समः-ஸமமாக இருப்பினும், तथापि-அப்படியிருந்தாலும் एते भक्ताः-இந்த பக்தர்கள், सदयावलोकेन-தயவுடன்கூடிய கடாக்ஷத்தால், परमानन्दे-பேரானந்தத்தில், रमन्ति-ஸந்தோஷமடைகின்றனர்.

பகவான் எங்கும் வியாபித்துள்ளவர். அவர் ஒரே மாதிரியாகத்தான் எங்கும் விளங்குகிறார். அவ்வாறு இருப்பினும் அவருடைய கடைக்கண் பார்வைகளால் பக்தர்கள் பேரானந்தத்தில் மூழ்கிக் களிக்கின்றனர். (254)

सुतरामनन्यशरणाः क्षीराद्याहारमन्तरा यद्वत् ।
केवलया स्नेहदृशा कच्छपतनयाः प्रजीवन्ति ॥ २५५ ॥

ஸுதராமனந்ய ஶரணா: க்ஷீராத்யாஹாரமந்தரா யத்வத் ।
கேவலயா ஸ்நேஹ த்ருஶா கச்சபதனயா: ப்ரஜீவந்தி ॥

**सुतरां**-மிகவும், **अनन्यशरणाः** -வேறு காப்பாளரற்ற, **कच्छपतनयाः** - ஆமைக் குஞ்சுகள், **क्षीराद्याहारमन्तरा** - பால் முதலிய உணவு இல்லாமல், **केवलया स्नेहदृशा**-அன்பு நிரம்பிய பார்வை ஒன்றினுலேயே, **यद्वत्** -எவ்வாறு, **प्रजीवन्ति**-வாழ்கின்றனவோ.

காப்பவர் வேறு ஒருவரும் இல்லாவிட்டாலும் ஆமைக் குஞ்சுகள் பால் முதலிய உணவு இல்லாமல் தன் தாயின் அன்பு நிறைந்த பார்வையாலேயே வளர்கின்றன: அது போல வேறு ஒருவரையும் அண்டாத பக்தர்கள் பொருள் ஒன்றும் இல்லாவிட்டாலும் பகவானின் கடாக்ஷத்தாலேயே பரமானந்தமடைகின்றனர் (255)

यद्यपि गगनं शून्यं तथापि जलदामृतांशुरूपेण ।
चातकचकोरनाम्नोर्दृढभावात्पूरयत्याशाम् ॥ २५६ ॥

யத்யபி ககனம் ஶூன்யம் ததாபி
ஜலதாம்ருதாம்ஶுரூபேண ।
சாதக சகோர நாம்னோர் த்ருட பாவாத் பூரயத்யாஶாம் ॥

**गगनं**-ஆகாசம், **शून्यं यद्यपि**-சூன்யமாயினும், **तथापि**-அவ்வாறு இருப்பினும், **चातकचकोरनाम्नोः**-சாதகம், சகோரம் என்ற பக்ஷிகளுடைய, **दृढभावात्** - உறுதியான எண்ணத்தால், **जलदामृतांशुरूपेण**-மேகம், சந்திரன் இவை மூலமாக, **आशां**-ஆசையை, **पूरयति**-நிறைவேற்றுகிறது.

ஆகாசத்தில் ஒன்றுமே இல்லை. அது சூன்யம். ஆனாலும் அங்கு மேகம் கிளம்பி மழை பொழிகிறது. மழை நீரைத்தவிற வேறுநீரைப் பருகுவதில்லை என்ற உறுதி

கொண்ட சாதகபக்ஷி மழைநீரைப் பருகி இன்புறுகிறது. அப்படியே ஆகாசத்தில் சந்திரன் கிளம்பி நிலவைப் பொழிகிறது. நிலவையே எதிர்பார்த்து உறுதியுடன் நிற்கும் சகோரபக்ஷி அதைப் பருகி ஆனந்தம் அடைகிறது. (256)

तद्वद्व्रजतां पुंसां दृग्वाङ्मनसामगोचरोऽपि हरिः ।
कृपया फलत्यकस्मात्सत्यानन्दामृतेन विपुलेन ॥ २५७ ॥

தத்வத் பஜதாம் பும்ஸாம் த்ருக்வாங்
மனஸாமகோசரோऽபி ஹரி: ।
க்ருபயா பலத்யகஸ்மாத் ஸத்யாநந்தாம்ருதேன விபுலேன ॥

तद्वत् -அதுபோலவே, दृग्वाङ्मनसां - கண்களுக்கும், வாக்கிற்கும், மனதிற்கும், अगोचरः अपि-புலனுகாமலிருந்தாலும், हरिः-விஷ்ணு, अकस्मात् -எதிர்பாராமலேயே, व्रजतां-சரணடைந்த, पुंसां-மனிதர்களுக்கு, कृपया-கிருபையால், विपुलेन-மிகுந்த, सत्यानन्दामृतेन-ஸதானந்தமாகிய அமுதத்தால், फलति-பயனளிக்கிருர்.

அதுபோலவே கண்களுக்கும், வாக்கிற்கும் மனதிற்கும் புலனுகாமலிருந்தாலும் பகவான் தன்னைச் சரணமடைந்தவர்களுக்கு அவர்கள் எதிர்பார்க்காமலேயே தன்னுடைய கருணு கடாக்ஷத்தால் ஆனந்தாமிருதத்தை அள்ளியளிக்கிருர்.

பிரபோதஸுதாகரம் முற்றிற்று.



|| श्रीः ||

# || भजगोविन्दम् ||

# பஜகோவிந்தம்

['பஜகோவிந்தம்' என்றும் 'மோஹமுத்கரம்' என்றும் கூறப்படும் இப்பிரகரணத்தில் 31 சுலோகங்கள் உள்ளன. இதில் 'கோவிந்தனை பஜிக்கவேண்டும்' என்று மும்முறை கூறி ஆரம்பித்து கடைசி சுலோகத்தில் 'உன் மனதிலேயே கோவிந்தனை நேரில் பார்ப்பாய்' என்று கூறி முடிக்கிறார். கோவிந்தனிடம் பக்தி என்ற ப்ரீதி ஏற்படுவதற்கு இடைஞ்சலாக உள்ளது உலக விஷயங்களில் நாம் கொண்டுள்ள ஆசைதான். இது நீங்கி வைராக்யம் ஏற்பட்டால்தான் பக்தி நிலைக்கும். அதற்காக சரீரம், மனைவி, மக்கள், உற்றார், பொருள் முதலியவற்றிலுள்ள தோஷங்களை எடுத்துக்காட்டி வைராக்யம் உண்டாகும்படி உபதேசிக்கிறார். ஆசை நீங்காதவரை எத்தனை ஸாதனங்களைக் கைக்கொண்டாலும் பலனில்லை என்பதைக் கூறி, வைராக்யத்துடன் வாழ்க்கை நடத்தும் வழியையும் காட்டி, ஸத்ஸங்கம், ஸமதர்சனம், யோகமுறைகள், முதலான ஸாதனங்களைக் கூறி ஞானத்தின் பெருமையையும் ஜீவன்முக்தசர்யையையும் காட்டுகிறார். நடுவில் பகவத்கீதை, ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம், கங்காதீர்த்தம், க்ருஷ்ணார்ச்சனம் இவற்றின் பெருமையையும் சொல்கிறார். கடைசியாக ஈசுவர தர்சனமோ, மோக்ஷானந்தமோ எல்லாம் குருபக்தனுக்குத்தான் கிடைக்கும் என்று கூறி முடிக்கிறார்.]

[1] भज गोविन्दं भज गोविन्दं भज गोविन्दं मूढमते ।
संप्राप्ते संनिहिते काले न हि न हि रक्षति डुकृञ्करणे ॥ १ ॥ (भज)

பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம் மூடமதே ।
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே நஹி நஹி ரக்ஷதி
டுக்ருஞ்கரணே ॥ (பஜ)

---

1. ஒவ்வொரு சுலோகத்தின் முடிவிலும் 'பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம் மூடமதே' என்பதைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

मूढमते-புத்திமோஹம் கொண்டவனே! गोविन्दं-கோவிந்தனை, भज-பஜிப்பாயாக, गोविन्दं-கோவிந்தனை, भज-பஜிப்பாயாக, गोविन्दं-கோவிந்தனை, भज-பஜிப்பாயாக, काले-யமன், सन्निहिते-நெருங்கி, संप्राप्ते-வந்தபொழுது, डुकृञ् करणे-"டுக்ருஞ்கரணே" என்ற வார்த்தையானது, नहि नहि रक्षति-ஒருக்காலும் காப்பாற்ருது.

மதிமயக்கம் கொண்டவனே! யமன் (உன் ஆயுளின் முடிவுகாலம்) நெருங்கி வந்தபொழுது நீ கற்றுக்கொள்ளும் (डुकृञ् करणे) 'டுக்ருஞ் கரணே' என்ற வார்த்தையானது உன்னைக் காப்பாற்றவே காப்பாற்ருது. ஆனதால் உன்னைக் காப்பாற்றும் கோவிந்தரை பஜனம்செய்.

இங்கு சாஸ்திரங்களிலும், லௌகிக வித்யைகளிலும் எவ்வளவு தேர்ச்சி பெற்றிருந்தாலும் ஈசனிடம் மனதைச் செலுத்தாதவர்கள் எல்லோரையும் மூடமதிகளென்று கூறப்பட்டது. கடவுளை அறிய முயற்சி செய்யாமல், லௌகிக விஷயங்களில் ஈடுபட்டிருத்தலே மோஹம். மோஹம் நீங்க கோவிந்தரை பஜிக்கவேண்டும். லோகத்தில் எந்த விஷயத்தையும் உறுதிப்படுத்துவதற்கு மூன்று தடவை கூறுவது வழக்கம். இங்கும் ஆசார்யாள் 'பஜகோவிந்தம்' என்பதை மூன்றுதடவை கூறுகிருர்கள். மேலும் இதை ஒவ்வொரு சுலோகத்தின் முடிவிலும் பல்லவியாகச் சேர்த்துக்கொள்ள வேண்டும். இதனுல் கோவிந்தனை கட்டாயம் பஜிக்க வேண்டும். மதிமயக்கம் நீங்க இதைத்தவிற வேறு உபாயம் கிடையாது என்று தெரிகிறது. அந்த்யகாலத்தில் பகவானை ஸ்மரித்தால்தான் ஸத்கதி கிடைக்கும். இப்பொழுது முதலே அப்யாஸம் செய்தால்தான் அந்த்ய காலத்தில் பகவத் ஸ்மரணமேற்படும்.

டுக்ருஞ் கரணே (डुकृञ् करणे) என்பது வியாகரண சாஸ்திரத்தில் தாதுபாடத்திலுள்ள ஒரு சொல். இதையே திருப்பித் திருப்பிச் சொல்லி உருப்பண்ணுகின்றவனைப் பார்த்து ஆசார்யாள் சொல்லுவதுபோல இந்த சுலோகம் அமைந்திருக்கிறது. வியாகரண சாஸ்திரம் உபயோகப்

படாது என்பது இதன் கருத்து. இதிலிருந்து ஆசார்யாள் வியாகரண சாஸ்திரத்தை நிந்திப்பதாக அர்த்தம்கொள்ளக் கூடாது. வேதபுருஷனுடைய ஆறு அங்கங்களில் வியாகரணத்தை மிக முக்கியமான முகமாகக் கூறப்பட்டிருக்கிறது. பாணினி செய்த தவத்தால் ஸந்தோஷமடைந்த ஸ்ரீ நடராஜருடைய உடுக்கையிலிருந்து கிளம்பிய பதினான்கு மாஹேச்வர ஸூத்திரங்களை மூலமாகக்கொண்டு பாணினி வியாகரண சாஸ்திரம் இயற்றினார். இதற்கு ஆதிசேஷருடைய அம்சமான பதஞ்ஜலி மஹாபாஷ்யம் இயற்றியிருக்கிறார். இவ்வளவு பெருமை வாய்ந்த வியாகரண சாஸ்திரத்தை ஆசார்யாள் ஒருகாலும் நிந்திக்கமாட்டார்கள். வியாகரண சாஸ்திரத்தை அப்யஸித்து அதன் உதவியால் வேதத்தினுடையவும், வேதாந்தத்தினுடையவும் பொருளைத் தெரிந்துகொண்டு ஈச்வர பக்தியுடன் ஆத்மவிசாரத்தில் ஈடுபடவேண்டும். ஈச்வரனை பஜிக்காமல் ஆத்மவிசாரத்தை மறந்து ஆயுள் முழுவதையும் வியாகரண சர்ச்சையிலேயே ஈடுபடுவதைத்தான் இங்கு ஆசார்யாள் நிந்திக்கிறார்.

இங்கு வியாகரண சாஸ்திரம் திருஷ்டாந்தமாகக் கூறப்பட்டது. இதே போல எல்லா சாஸ்திரங்களும் லௌகிக வித்யைகளும் ஈச்வர பக்தியில்லாதவனுக்கு உபயோகமற்றவைகளே. இவைகளால் கீர்த்தியும் ஸன்மானமும் கிடைக்கலாம். யமபயம் நீங்காது. சாஸ்திரப் பயிற்சி இருந்தாலும் ஈச்வர பக்தியில்லாதவர்கள் மூடர்கள்தான். சாஸ்திரப்பயிற்சியையே புருஷார்த்தமாக நினைத்துக் கொண்டு அதிலேயே ஆயுள் முழுவதையும் செலுத்தக் கூடாது.

தாது பாடத்தின் நடுவில் தான் डुकृञ् करणे என்பது இருக்கிறது. भू सत्तायां என்பதுதான் முதலில் இருக்கிறது. முதலிலிருப்பதை விட்டு நடுவிலிருப்பதை ஆசார்யாள் கூறுவதிலிருந்து இங்கு மற்றோர் அர்த்தம் த்வனிக்கிறது. कृञ् என்ற தாதுவுக்கு करणं அதாவது க்ரியை என்று அர்த்தம். ஈச்வரனிடம் பக்தியில்லாது பலனை அவருக்கு அர்ப்பணம்

செய்யாமல் தனக்காக பலனை விரும்பிச் செய்யும் கர்மா வானது மிருத்யுபயத்தைப் போக்காது. தான் செய்த கர்மாக்களின் பலனை அனுபவிப்பதற்காக இவன் திரும்பத் திரும்ப ஜனனமரண பிரபஞ்சத்தில் சுற்றிச் சுற்றி வருவான். ஆதலால் ஈச்வரார்ப்பண புத்தியுடன் கர்மாக்களை செய்ய வேண்டும். **मूढमते** என்பதால் விஷயங்களில் மயங்கிச் செல் கின்ற மனதிற்கு உபதேச ரூபமாகவும் இந்த க்ரந்தத்தைச் சொல்லாம். (1)

**मूढ जहीहि धनागमतृष्णां कुरु सद्बुद्धिं मनसि वितृष्णाम् ।**
**यल्लभसे निजकर्मोपात्तं वित्तं तेन विनोदय चित्तम् ॥ २ ॥**

மூட ஜஹீஹி தநாகம த்ருஷ்ணாம்
குரு ஸத்புத்திம் மநஸி வித்ருஷ்ணாம் ।
யல்லபஸே நிஜ கர்மோபாத்தம்
வித்தம் தேந விநோதய சித்தம் ॥

**मूढ**-மூடனே, **धनागमतृष्णां**-பணம் வருவதில் பேரா சையை, **जहीहि**-விட்டுவிடு. **मनसि**-மனதில், **वितृष्णां**-ஆசை யற்றதான, **सद्बुद्धिं**-நல்லறிவை, **कुरु**-செய்துகொள். **निज-कर्मोपात्तं**-தான் செய்த புண்யகர்மாவினால் கிடைத்த, **यत् वित्तं**-எந்தப்பொருளை, **लभसे**-அடைகிறாயோ, **तेन**-அதனால், **चित्तं**-மனதை, **विनोदय**-ஸந்தோஷப்படுத்து.

மூடனே! மேலும் மேலும் பணத்தைச் சேகரிப்பதில் பேராசையை விட்டுவிடு. மனதில் ஆசையற்ற நல்லறிவை ஏற்படுத்திக்கொள். விஷயங்களை துச்சமாக நினைப்பதால் மனதிலுள்ள ஆசைகளை நீக்கி பெரியோர்களுடைய உபதேசங்களாலும் சாஸ்திரங்கள் மூலமாகவும் நல்லறிவை சம்பாதித்து அதை மனதில் நிலைநிற்கச்செய். ஸ்வதர்மத்தி லிருந்து நழுவாமல் முற்பிறவிகளில் செய்த கர்மானு ஸாரமாக ஏற்பட்ட எந்தப் பொருளை நீ அடைகிறாயோ அதனாலேயே உன் மனதை ஸந்தோஷப்படுத்திக்கொள். அதோடு திருப்தியடைந்து அதைவிட அதிகமான

பொருளை சம்பாதிப்பதில் ஆசைகொள்ளாதே. वित्तैषणा என்று சொல்லப்படும் பணப் பேராசையை ஒழித்து கிடைத்ததைக்கொண்டு திருப்தியடைய வேண்டும். (2)

नारीस्तनभरनाभीदेशं दृष्ट्वा मा गा मोहावेशम् ।
एतन्मांसवसादिविकारं मनसि विचिन्तय वारं वारम् ॥ ३ ॥

நாரீ ஸ்தநபர நாபீ தேசம்
த்ருஷ்ட்வா மாகா மோஹாவேசம் ।
ஏதன் மாம்ஸ வஸாதி விகாரம்
மநஸி விசிந்தய வாரம்வாரம் ॥

नारीस्तनभरनाभीदेशं-பெண்களின் ஸ்தனபாரம், தொப்புள் பிரதேசம் இவற்றை, दृष्ट्वा-பார்த்து, मोहावेशं-மோஹத்தின் ஆவேசத்தை, मागाः-அடையாதே. एतत्-இதை, मांसवसादिविकारं-மாம்ஸம், கொழுப்பு முதலியவற்றின் மாறுபாடாக, मनसि-மனத்தில், वारंवारं-அடிக்கடி, विचिन्तय-ஆலோசித்துப் பார்.

ஸ்திரீகளுடைய ஸ்தனபாரம், நாபி இந்த இடங்களைப் பார்த்து மோஹத்தின் ஆவேசத்தை அடையாதே. இந்த அவயவங்கள் மாம்ஸம், கொழுப்பு முதலியவைகளால் ஆக்கப்பட்டது என்பதை அடிக்கடி மனதில் ஆலோசித்துப் பார். கண்ணுக்குப் புலப்படாது ஸூக்ஷ்ம சரீரத்துடன் சஞ்சரிக்கும் பூதபிசாசங்கள் மனிதனுடைய சரீரத்திற்குள் புகுந்துவிட்டால் அவன் தன்னை மறந்து அதனுல் ஆட்டி வைக்கப்பட்டு அதன் தூண்டுதலால் அதன் இஷ்டப்படி கார்யங்களைச் செய்கிறுன். இதுபோல பெண்களுடைய அவயவங்களைப் பார்த்ததும் நம்மையும் மீறி மோஹம் என்ற பிசாசு உள்ளே மனதிற்குள் புகுந்து நம்மை ஆட்டி வைக்கிறது. அதற்கு வசப்பட்டவனுய் கார்யங்களைச் செய்கிறுன். இந்த மோஹம் நீங்க வைராக்யம் ஏற்பட வேண்டும். விஷயங்களிலுள்ள தோஷங்களைத் திருப்பித் திருப்பி சிந்திப்பதால்தான் வைராக்யம் உண்டாகும். எந்த ஸ்தனம் முதலிய அவயவங்களைப் பார்த்து மோஹம்கொள்

கிருந்தே, அந்த அவயவங்கள் மாம்ஸமும் கொழுப்பும் கலந்து ஏற்பட்டது என்பதை அடிக்கடி நினைக்க ஆரம்பித்தால் வெறுப்பு ஏற்பட்டு மோஹம் நீங்கும். இங்கு தாரேஷணை (दारेषणा) நீங்குவதற்கு உபாயம் கூறப்பட்டது. இதுபோலவே வைராக்யமேற்படுவதற்காக விஷயங்களின் தோஷங்களை பல சுலோகங்களில் விவரிக்கிறார். (3)

नलिनीदलगतजलमतितरलं तद्वज्जीवितमतिशयचपलम् ।
विद्धि व्याध्यभिमानग्रस्तं लोकं शोकहतं च समस्तम् ॥ ४ ॥

நளினீ தளகத ஜலமதிதரளம்
தத்வத் ஜீவிதமதிசய சபலம் ।
வித்தி வ்யாத்யபிமான க்ரஸ்தம்
லோகம் சோகஹதம் ச ஸமஸ்தம் ॥

नलिनीदलगतजलं-தாமரை இலையிலுள்ள ஜலம், अतितरलं-மிகவும் சஞ்சலமானது., तद्वत्-அதுபோலவே, जीवितं-வாழ்க்கையும், अतिशयचपलं-மிகவும் நிலையற்றது. लोकं समस्तं-உலகம் பூராவையும், व्याध्यभिमानग्रस्तं-பிணி, கர்வம் இவற்றால் பிடிக்கப்பட்டதாகவும், शोकहतं च-துன்பத்தால் அடிபட்டதாகவும், विद्धि-அறிந்துகொள்.

தாமரை இலையை அடைந்த ஜலம் நிலையில்லாமல் எப்பொழுதும் அசைந்துகொண்டேயிருக்கும். அதுபோலவே நம் வாழ்வும் மிகவும் நிலையற்றது. உலகமெல்லாம் பிணி, அஹங்காரம் இவைகளுக்குட்பட்டதாகவும் சோகத்தால் பீடிக்கப்பட்டதாகவும் அறிந்துகொள். பூர்வ புண்யவசத்தால் கிடைத்திருக்கும் இந்த சரீரம் சாச்வதமல்ல. எந்த நிமிஷத்திலும் நாம் இதைவிட்டுப் பிரிய நேரலாம். இருக்கும் காலத்திலும் அஹங்காரம், வியாதி, கோரினபொருள் கிடையாமை, கிடைத்த பொருளின் பிரிவு முதலியவைகளால் துன்பமே தவிர கொஞ்சமும் சுகமில்லை. ஆகையால் இப்பொழுதே கோவிந்தனை பஜி. நாளையென்று தள்ளிப் போடாதே. (4)

यावद्वित्तोपार्जनसक्तस्तावन्निजपरिवारो रक्तः ।
पश्चाज्जीवति जर्जरदेहे वार्तां कोऽपि न पृच्छति गेहे ॥ ५ ॥

யாவத் வித்தோபார்ஜந ஸக்தஸ்
தாவந் நிஜபரிவாரோ ரக்தः ।
பச்சாத் ஜீவதி ஜர்ஜர தேஹே
வார்த்தாம் கோऽபி ந ப்ருச்சதி கேஹே ॥

यावत् -எதுவரை, वित्तोपार्जनसक्तः-பணம் ஸம்பாதிப்பதில் ஈடுபட்டுள்ளானோ, तावत् -அதுவரையில், निजपरिवारः- தன்னைச்சூழ்ந்துள்ள ஜனர், रक्तः-ப்ரீதி உள்ளதாக இருக்கும். पश्चात् -பின்னால், जर्जरदेहे-தளர்வுற்ற சரீரம், जीवति- உயிருடன் இருக்கும்பொழுதே, गेहे-வீட்டில், कोऽपि-ஒருவரும் वार्तां-தன் விருத்தாந்தத்தை, न पृच्छति-கேட்கிறதில்லை.

எதுவரையிலும் பணம் சம்பாதிப்பதில் ஈடுபட்டவனாய் இருக்கிறானோ, அதுவரையிலும் தன்னைச் சூழ்ந்திருக்கும் பரிஜனங்கள் தன்னிடம் பிரியமுள்ளவர்களாயிருப்பார்கள். அதற்குப் பின்னால் வியாதி, மூப்பு முதலியவைகளால் தளர்வுற்ற இவ்வுடல் உயிருடன் இருக்கும்போதே வீட்டில் ஒருவராவது நம்மிடம் க்ஷேம வார்த்தை விசாரிக்க மாட்டார்கள். (5)

यावत्पवनो निवसति देहे तावत्पृच्छति कुशलं गेहे ।
गतवति वायौ देहापाये भार्या बिभ्यति तस्मिन्काये ॥ ६ ॥

யாவத் பவனோ நிவஸதி தேஹே
தாவத் ப்ருச்சதி குசலம் கேஹே ।
கதவதி வாயௌ தேஹாபாயே
பார்யா பிப்யதி தஸ்மின் காயே ॥

यावत् -எதுவரை, देहे-உடலில், पवनः-பிராணவாயு, निवसति-வாஸம் செய்கிறதோ, तावत् -அதுவரை, गेहे- வீட்டில், कुशलं-க்ஷேமத்தை, पृच्छति-கேட்கிறான். वायौ-

பிராணவாயு, गतवति-வெளியில் சென்று, देहापाये-சரீரத்திற்கு அபாயம் ஏற்பட்டபின், तस्मिन् काये-அந்த சரீரத்தில், भार्याः-தன்னால் போஷிக்கத்தக்க மனைவி முதலானவர்களும், बिभ्यति-பயம் அடைகின்றனர்.

வீட்டில் நம்மிடம் மிகவும் அபிமானம் கொண்டவர்களும் எதுவரையில் மூச்சுக்காற்று நம்மிடம் குடிகொண்டு இருக்கிறதோ அதுவரை க்ஷேமம் விசாரிக்கிறார்கள். பிராணன் வெளியில் கிளம்பிச்சென்று தேஹத்திற்கு அபாயம் ஏற்பட்டபொழுது அந்த உயிரற்ற சரீரத்தைக் கண்டு மனைவியும் பயப்படுகிறாள். (6)

बालस्तावत्क्रीडासक्तस्तरुणस्तावत्तरुणीसक्तः ।
वृद्धस्तावच्चिन्तासक्तः परमे ब्रह्मणि कोऽपि न सक्तः ॥ ७ ॥

பாலஸ் தாவத் க்ரீடாஸக்தஸ்
தருணஸ் தாவத் தருணீஸக்த:
வ்ருத்தஸ் தாவத் சிந்தாஸக்த:
பரமே ப்ரஹ்மணி கோபி நஸக்த: ॥

बालस्तावत् – சிறுவனாவெனில், क्रीडासक्तः-விளையாட்டிலேயே ஈடுபட்டுள்ளான், तरुणस्तावत् -வாலிபனாவெனில், तरुणीसक्तः-யௌவன மங்கையரிடம் ஈடுபட்டுள்ளான். वृद्धस्तावत् - கிழவனாவெனில், चिन्तासक्तः-கவலையிலேயே ஈடுபட்டிருக்கிறான். परमे ब्रह्मणि-பரப்ரஹ்மத்தில், कोऽपि-ஒருவரும், न सक्तः-ஈடுபடவில்லை.

சிறுவனாவெனில் (இளமைப் பருவத்திலிருக்கும் பொழுது) முழுவதும் விளையாட்டில் ஈடுபட்டவனாகவும், யுவாவோவெனில் (யௌவனப் பிராயத்திலிருக்கும் பொழுது) யுவதியிடம் ஈடுபட்டவனாகவும், கிழவனாவெனில் (கிழப் பருவத்திலிருக்கும்பொழுது) பலவித கவலையுள்ளவனாகவுமிருக்கிறான். பரப்ரஹ்மத்தினிடம் ஒருவரும் ஈடுபடுவதில்லை. ஒவ்வொருவரும் தன் ஆயுளில் குழந்தைப் பருவத்தில் விளையாட்டிலும், வாலிப பருவத்தில் பெண்களிடமும், கிழப்

பருவத்தில் கவலைகளிலும் மனதை செலுத்தி, இவ்விதமே காலத்தை கழித்து விடுகிருன். ஆயுளும் முடிந்து விடுகிறது. கடவுளை சிந்திப்பதற்கு அவகாசமேயில்லாமல் போய் விடுகிறது. (7)

**का ते कान्ता कस्ते पुत्रः संसारोऽयमतीव विचित्रः ।**
**कस्य त्वं कः कुत आयातस्तत्त्वं चिन्तय यदिदं भ्रातः ॥ ८ ॥**

கா தே காந்தா கஸ்தே புத்ர:
ஸம்ஸாரோऽயமதீவ விசித்ர: |
கஸ்ய த்வம் க: குத ஆயாதஸ்-
தத்வம் சிந்தய யதிதம் ப்ராத: ||

भ्रातः-தம்பி! ते-உனக்கு, कान्ता-மனைவி, का-யார்? ते-உனக்கு, पुत्रः-தனயன், कः-யார்? त्वं-நீ, कस्य-யாருடையவன்? कः-(நீ) யார்?, कुतः-(நீ) எங்கிருந்து, आयातः-வந்திருக்கிருய்? अयं-இந்த, संसारः-ஸம்ஸாரம், अतीव-மிகவும், विचित्रः-ஆச்சர்யமாக இருக்கிறது. यत्-எது, तत्त्वं-உண்மையோ, इदं-இதை, चिन्तय-ஆலோசித்துப்பார்.

உன் மனைவி என்பவள் யார்? உன்னுடைய பிள்ளை என்பவன் யார்? நீதான் யார்? நீ யாருடையவன்? நீ எங்கிருந்து வந்திருக்கிருய்? இந்த ஸம்ஸாரம் மிகவும் விசித்திரமானது. தம்பியே! இது ஸம்பந்தமான உண்மையை நன்கு விசாரித்துப்பார். தேஹத்தில் அபிமானம் வேரூன்றியிருப்பதால் அதை யொட்டி மனைவி பிள்ளை முதலியவர்களிடமும் அபிமானமேற்படுகிறது. அதனுல் அவர்கள் துக்கப்படும்பொழுது நாமும் துக்கப் படுகிருேம். அவர்கள் ஸுகப்படும்பொழுது நாமும் ஸுகத்தையடைகிருேம். இது நன்கு விசாரிக்காமையால் ஏற்படுவது. உண்மையை விசாரிப்பவர்களுக்கு கொஞ்சமேனும் துன்பமில்லை. நமக்கு சரீரமும் அதையொட்டி மனைவி முதலியவர்களின் ஸம்பந்தமும் முற்பிறவியில் செய்த கர்மாதீனமாக ஏற்படுவது. இதுவும் சாச்வதமில்லை. இதில் அளவுகடந்த அபிமானம் வைப்பதால்தான்

இவ்வளவு துன்பமும் ஏற்படுகிறது. இதுபோல எத்தனையோ பிறவிகளில் யாராரிடமோ மனைவி, பிள்ளை, என்ற அபிமானம் வைத்து அவர்களுக்காக புண்ய பாபங்களைச் செய்து அதன் மூலமாக கணக்கற்ற பிறவிகளை எடுத்துத் துன்பப்பட்டாய்விட்டது. ரயிலில் யாத்திரை செய்யும்பொழுது புதிதாக பழக்கம் ஏற்பட்டு சிநேகம் ஏற்படுவதும் பிறகு அது மறைந்துபோவதும் போலத்தான் இந்த சரீரத்தையொட்டி புத்ராதிகளின் ஸம்பந்தமும். நாம் தனியாகத்தான் வந்தோம். தனியாகத்தான் போகப் போகிறோம். நடுவில் கொஞ்சகாலம் பலருடன் சேர்ந்து வாழுகிறோம். சரீரமும் இப்படியே. கர்மா ஒன்றுதான் எப்பொழுதும் நம் கூட வருவது. இவ்விதம் விசாரித்தால் அபிமானம் நீங்கும். இங்கு (**दारेषणा पुत्रेषणा**) தாரேஷணை புத்ரேஷணை நீங்க உபாயம் கூறப்பட்டது. (8)

**सत्सङ्गत्वे निःसङ्गत्वं निःसङ्गत्वे निर्मोहत्वम् ।**
**निर्मोहत्वे निश्चलितत्वं निश्चलितत्वे जीवन्मुक्तिः ॥ ९ ॥**

ஸத்ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம்
நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம் ।
நிர்மோஹத்வே நிச்சலிதத்வம்
நிச்சலிதத்வே ஜீவன்முக்தி: ॥

**सत्संगत्वे**-நல்லோர்களுடைய சேர்க்கை உண்டாகும் பொழுது, **निस्सङ्गत्वं**-(உலகப் பொருள்களில்) பற்றின்மை (ஏற்படுகிறது), **निस्सङ्गत्वे**-பற்றின்மை ஏற்பட்டதும், **निर्मोहत्वं**-மோஹம் நீங்கிய நிலை உண்டாகிறது. **निर्मोहत्वे**-மோஹம் நீங்கியபின், **निश्चलितत्वं**-சஞ்சலமற்றநிலை ஏற்படுகிறது. **निश्चलितत्वे**-சஞ்சலம் நீங்கியபின், **जीवन्मुक्तिः**-உயிருள்ளபோதே முக்தி ஏற்படுகிறது.

நல்லோருடைய சேர்க்கை ஏற்படும் பொழுது மற்ற விஷயங்களில் பற்றற்ற தன்மை உண்டாகும். ஆசை நீங்கும். பற்றின்மை ஏற்பட்டால் மோஹம் நீங்கும். மோஹம் நீங்கினால் அசைவற்ற ஞான நிஷ்டை ஏற்படும். ஞான

நிஷ்டை ஸ்திரப்படுமானல் உயிரோடிருக்கும்பொழுதே ஜீவன்முக்தி ஏற்படும். துஷ்ட ஸஹவாஸத்தை அறவே விட்டொழித்து ஸாதுக்களுடனேயே எப்பொழுதும் கூடிப் பழகிக்கொண்டிருந்தால் அவர்களுடைய நடத்தையைப் பார்த்தும், உபதேசங்களைக் கேட்டும் சிரமமில்லாமல் தானகவே லௌகிக விஷயங்களில் ஆசை நீங்கி அவிவேகம் தொலைந்து தத்வ ஞானம் ஏற்பட்டு அதுவும் ஸ்திரப்பட்டு ஜீவன்முக்தனுகிருன். ஸத்ஸங்கம் தான் எல்லாவற்றிற்கும் மூலம். (9)

वयसि गते कः कामविकारः शुष्के नीरे कः कासारः ।
क्षीणे वित्ते कः परिवारो ज्ञाते तत्त्वे कः संसारः ॥ १० ॥

வயஸி கதே க: காம விகார:
ஶுஷ்கே நீரே க: காஸார: |
க்ஷீணே வித்தே க: பரிவாரோ
ஞாதே தத்வே க: ஸம்ஸார: ||

**वयसि**—யௌவனபருவம், **गते**—நீங்கியபின், **कः काम-विकारः**—என்ன காமவிகாரம்? **नीरे**—தண்ணீர், **शुष्के**—வற்றிய பின், **कः कासारः**-என்ன குளம்? **वित्ते**-செல்வம், **क्षीणे**-அழிந்த பின், **कः परिवारः**—என்ன பரிஜனம்? **तत्वे**—உண்மை, **ज्ञाते**—அறிந்தபின், **कः संसारः**—என்ன ஸம்ஸாரம்?

வயது சென்ற பிறகு காமவிகாரம் என்னவிருக்கிறது? ஜலம் வற்றிப்போன பிறகு குளம் என்னவிருக்கிறது? பணம் குறைந்த பிறகு பரிஜனம் என்னவிருக்கிறது? உண்மை அறிந்தபிறகு ஸம்ஸாரம் என்னவிருக்கிறது? யௌவன வயதில்தான் காமவிகாரம். ஜலமிருக்கும் பொழுதுதான் ஏரி என்ற பெயர். பணமிருந்தால்தான் பரிஜனம். இதுபோல உண்மையை அறியும் வரையில்தான் ஸம்ஸார வியவஹாரமெல்லாம். அதற்குப்பின் ஒன்றுமில்லை.

मा कुरु धनजनयौवनगर्वं हरति निमेषात्कालः सर्वम् ।
मायामयमिदमखिलं हित्वा ब्रह्मपदं त्वं प्रविश विदित्वा ॥

மா குரு தந ஜந யௌவந கர்வம்
ஹரதி நிமேஷாத் கால: ஸர்வம் ।
மாயா மயமிதமகிலம் ஹித்வா
ப்ரஹ்மபதம் த்வம் ப்ரவிஶ விதித்வா ॥

**धन**-பணம், **जन**-உறவினர், **यौवन**-வாலிபம் இவற்றால் **गर्व**-அஹங்காரத்தை, **माकुरु**-செய்யாதே. **कालः**-காலமானது, **निमेषात्**-ஒரு நிமிஷத்தில், **सर्वं**-எல்லாவற்றையும், **हरति**-பிடுங்கிக்கொண்டு விடுகிறது. **मायामयं**-மாயையால் ஏற்பட்டதான, **इदं अखिलं**-இது எல்லாவற்றையும், **हित्वा**-விட்டு விட்டு, **त्वं**-நீ, **ब्रह्मपदं**-ப்ரஹ்மஸ்வருபத்தை, **विदित्वा**-அறிந்து **प्रविश**-அதில் நுழைவாயாக.

பணம், உறவினர், யௌவனம் இவைகளை அடைந்ததைப்பற்றி கொஞ்சமும் கர்வம் கொள்ளாதே. காலமானது ஒரு நிமிஷத்தில் உன்னைக்கேட்காமலே எல்லாவற்றையும் உன்னிடமிருந்து அபஹரித்துவிடுகிறது. மாயையால் ஏற்பட்ட பொய்யான இதெல்லாவற்றையும் விட்டுவிட்டு அபிமானம் கொள்ளாமல் உண்மையையறிந்து நீ ப்ரஹ்மஸ்வருபத்தை அடைவாயாக. (11)

**दिनयामिन्यौ सायं प्रातः शिशिरवसन्तौ पुनरायातः ।**
**कालः क्रीडति गच्छत्यायुस्तदपि न मुञ्चत्याशावायुः ॥**

தினயாமிந்யௌ ஸாயம் ப்ராத:
ஶிஶிர வஸந்தௌ புநராயாத: ।
கால: க்ரீடதி கச்சத்யாயுஸ்-
ததபி ந முஞ்சத்யாஶாவாயு: ॥

**दिनयामिन्यौ**-பகலும் இரவும், **सायं प्रातः**-மாலையும் காலையும், **शिशिरवसन्तौ**-சிசிரருதுவும் வஸந்தருதுவும், **पुनरायातः**-திரும்பித்திரும்பி வருகின்றன. **कालः**-காலமானது, **क्रीडति**-விளையாடுகிறது **आयुः**-ஆயுள், **गच्छति**-செல்கிறது, **तदपि**-அப்படியிருந்தாலும், **आशावायुः**-ஆசை என்னும் காற்று, **न मुञ्चति**-விடுகிறதில்லை.

பகலும் இரவும், ஸாயங்காலமும் விடியற்காலமும், சிசிரருதுவும் வஸந்தகாலமும் திரும்பித் திரும்பி வந்து கொண்டிருக்கின்றன. இவ்விதம் காலமானது உன்னுடன் விளையாடுகிறது ஆனால் உன்னுடைய ஆயுள் உனக்குத் தெரியாமலே போய்க்கொண்டிருக்கிறது அப்படியிருந்தும் ஆசையென்ற காற்று விடுகிறதில்லை. (12)

का ते कान्ताधनगतचिन्ता वातुल किं तव नास्ति नियन्ता ।
त्रिजगति सज्जनसङ्गतिरेका भवति भवार्णवतरणे नौका ॥

கா தே காந்தா தந கத சிந்தா
வாதுல கிம் தவ நாஸ்தி நியந்தா ।
த்ரிஜகதி ஸஜ்ஜந ஸங்கதிரேகா
பவதி பவார்ணவ தரணே நௌகா ॥

**वातुल**-காற்றைப்போல அலைபவனே! **कान्ताधनगत-चिन्ता**-மனைவி, பணம் இவற்றைப்பற்றிய கவலை, **ते**-உனக்கு **का**-என்ன? **तव**-உன்னை, **नियन्ता**-அடக்குபவர், **किं नास्ति**-இல்லையா? **त्रिजगति**-மூவுலகிலும், **सज्जनसङ्गतिः एका**-நல்லோர்களின் சேர்க்கை ஒன்றுதான், **भवार्णवतरणे**-பிறவிக்கடலைக் கடப்பதற்கு, **नौका**-ஓடமாக, **भवति**-ஆகிறது.

காற்றுப்போல அலையும் ப்ராந்தனே, உன்னுடைய பார்யையிடத்திலும் பணத்திலும் உள்ள உன் கவலை (ஆசை)யானது என்ன? எப்பேற்பட்டது? துக்கத்தையே கொடுக்கக்கூடியது. உனக்கு சிக்ஷகன் இல்லையா? அதிலிருந்து உன்னைத் தடுத்து உனக்கு உபதேசம் செய்பவன் ஒருவரும் இல்லையா? மூவுலகிலும் ஸாதுஜனங்களின் சேர்க்கை ஒன்றே ஜனன மரண ஸம்ஸாரக் கடலைக் கடப்பதற்கு ஓடமாகிறது. (13)

जटिलो मुण्डी लुञ्चितकेशः काषायाम्बरबहुकृतवेषः ।
पश्यन्नपि च न पश्यति मूढो ह्युदरनिमित्तं बहुकृतवेषः ॥

ஜடிலோ முண்டீ லுஞ்சித கேஶ:
காஷாயாம்பர பஹுக்ருத வேஷ: ।
பஶ்யன்னபி ச ந பஶ்யதி மூட:
ஹ்யுதர நிமித்தம் பஹுக்ருத வேஷ: ॥

जटिलः–ஜடை தரித்தவனுயினும், मुण्डी-மொட்டையடித்துக்கொண்டவனுயினும், लुञ्चितकेशः–தலையிரைப் பிடுங்கிக் கொண்டிருந்தபோதிலும், काषायाम्बर-காவித்துணியால் बहुकृतवेषश्च–பல வேஷங்களைச் செய்துகொண்டாலும், मूढः–மூடன், पश्यन्नपि–பார்த்துக்கொண்டிருந்தபோதிலும், न पश्यति-அறிந்துகொள்ளவில்லை. बहुकृतवेषः-பலவாக செய்யப்பட்ட வேஷம் எல்லாம், उदरनिमित्तं हि–வயிற்றுப்பிழைப்புக் காகவல்லவா ஏற்பட்டிருக்கிறது.

ஜடை தரித்தவனுயிருந்தாலும், தலை மொட்டையாயிருந்தாலும், கேசத்தை ஒவ்வொன்ருக பிடுங்கிக்கொண்டவனுயிருந்தாலும், காஷாய வஸ்திரத்தால் பலவித வேஷம் போட்டவனுயிருந்தாலும் பரமாத்ம வஸ்துவை சாஸ்திரங்களாலும் குருவின் உபதேசத்தாலும் அறிந்தும் அனுபவிக்கவில்லையோ அவன் மூடனே. அவன் பலவிதமாகச் செய்துகொண்ட வேஷமெல்லாம் வயிற்றை வளர்ப்பதின் பொருட்டேயாகிறது. நிவிருத்தி மார்க்கத்தில் செல்பவர்கள் பல மதங்களிலுமிருக்கிருர்கள். பலவிதமான வேஷங்களை தரிக்கிருர்கள். ஆத்மவிசாரம் பண்ணுகிருர்கள். இருந்தாலும் ஆத்மானுபவத்தையடைய முயற்சி செய்யாவிட்டால் அவர்கள் தரிக்கும் வேஷம் வீணே. இந்த வேஷமெல்லாம் வயிற்றுப் பிழைப்பிற்காக ஏற்பட்டதாகவே ஆகிறது. (14)

अङ्गं गलितं पलितं मुण्डं दशनविहीनं जातं तुण्डम् ।
वृद्धो याति गृहीत्वा दण्डं तदपि न मुञ्चत्याशापिण्डम् ॥

அங்கம் கலிதம் பலிதம் முண்டம்
தஶந விஹீநம் ஜாதம் துண்டம் ।
வ்ருத்தோ யாதி க்ருஹீத்வா தண்டம்
ததபி ந முஞ்சத்யாஶா பிண்டம் ॥

अङ्गं-உடல், गलितं-தளர்ந்துவிட்டது, मुण्डं-தலை, पलितं-நரைத்துவிட்டது, तुण्डं-வாய், दशनविहीनं-பற்கள் அற்றதாக, जातं-ஆகிவிட்டது, वृद्धः-கிழவன், दण्डं-தடியை, गृहीत्वा-பிடித்துக்கொண்டு, याति-செல்கிறான், तदपि-அப்படி இருந்தாலும், आशापिण्डं-ஆசை என்னும் பொருள், न मुञ्चति-விடுவதில்லை.

உடல் தளர்ந்துவிட்டது. தலை நரைத்து விட்டது. வாய் பற்களற்றதாய்விட்டது கிழவனாகி தடியை பிடித்துக் கொண்டு நடக்கிறான். அப்படியிருந்தாலும் ஆசைமட்டும் விடவில்லை.

மூப்பினால் உடலில் வலிமை குன்றி நடக்கவும் சக்தியற்று தடியை ஊன்றித் தள்ளாடிக்கொண்டு நடக்கிறான். தலை நரைத்து வாயில் பற்களெல்லாம் உதிர்ந்துவிட்டன. உடலைவிட்டு உயிர் பிரியுங்காலம் நெருங்கிவிட்டது. ஆசைப்படும் பொருள்களை அடைந்தாலும் அவைகளை அனுபவிக்க சக்தியில்லை. அந்த சமயத்திலும் ஆசைமட்டும் வளருகிறதே தவிர குறைவதில்லை. ஆசையையொழிக்க மிகுந்த முயற்சி செய்யவேண்டும். (15)

अग्रे वह्निः पृष्ठे भानुः रात्रौ चुबुकसमर्पितजानुः ।
करतलभिक्षस्तरुतलवासस्तदपि न मुञ्चत्याशापाशः ॥ १६ ॥

அக்ரே வஹ்னி: ப்ருஷ்டே பாநு:
ராத்ரௌ சுபுக ஸமர்பித ஜாநு: ।
கர தல பிக்ஷஸ்தரு தலவாஸ:
ததபி ந முஞ்சத்யாஶா பாஶ: ॥

अग्रे-முன்னால், वह्निः-நெருப்பு, पृष्ठे-பின்னால், भानुः-ஸூர்யன். रात्रौ-இரவில், चुबुकसमर्पितजानुः-முழங்காலில் மோவாய்க்கட்டையை வைத்துக்கொண்டிருக்கிறான். करतलभिक्षः-கையிலேயே பிக்ஷை வாங்கி உண்பவனாகவும், तरुतलवासः-மரத்தடியில் வாஸம் செய்பவனாகவும் இருக்கிறான். तदपि-அப்படியிருந்தும், आशापाशः-ஆசை என்னும் பந்தம், न मुञ्चति-விடுகிறதில்லை.

முன்னால் நெருப்பும் பின்னால் அதாவது மேலே ஸூரியனும் இருக்கிறார்கள். கடும் வெய்யிலில் முன்னால் நெருப்பை வளர்த்துக்கொண்டு கடுந்தவம் செய்கிறான். இரவில் முழங்காலில் மோவாய்க்கட்டையை வைத்துக்கொண்டு ஹடயோகம் செய்கிறான். வேறு பாத்திரங்கள் ஒன்றும் வைத்துக்கொள்ளாமல் கையிலேயே பிக்ஷைவாங்கி சாப்பிடுகிறான். மரத்தடியிலேயே வாஸம் செய்கிறான். இவ்வாறு ஸர்வபரித்யாகம்செய்து பலவிதத்திலும் சரீரத்தை வாட்டிக்கொண்டபோதிலும் ஆசாபாசம் மட்டும் விடுவதில்லை. (16)

**कुरुते गङ्गासागरगमनं व्रतपरिपालनमथवा दानम् ।**
**ज्ञानविहीनः सर्वमतेन मुक्तिं न भजति जन्मशतेन ॥ १७ ॥**

குருதே கங்கா ஸாகரகமநம்
 வ்ரத பரிபாலனமதவா தாநம் ।
ஞான விஹீந: ஸர்வ மதேன
 முக்திம் ந பஜதி ஜன்ம ஶதேன ॥

**गङ्गासागरगमनं**-கங்கைக்கும் ஸமுத்திரத்திற்கும் யாத்திரையை, **कुरुते**-செய்கிறான். **व्रतपरिपालनं**-விரதங்களை வழுவாது நடத்துவதை (செய்கிறான்.) **अथवा**-அல்லது, **दानं**-தானத்தை (செய்கிறான்), **सर्वमतेन**-எல்லா மதப்படியும், **ज्ञानविहीनः**-ஞானம் இல்லாதவன், **जन्मशतेन**-நூறு பிறவிகளாலும், **मुक्तिं**-மோக்ஷத்தை, **न भजति**-அடைகிறானில்லை.

கங்கை, ஸாகரம் (ஸேது) முதலிய புண்ய தீர்த்தங்களுக்கு யாத்திரை செய்கிறான். அல்லது ஏகாதசி முதலிய விரதங்களை வழுவாது நடத்திவருகிறான். அல்லது தானங்கள் செய்கிறான். என்ன செய்தாலும் ஆத்மஞானம் அடையாதவன் எல்லா மதப்படியும் நூறு பிறவிகளை எடுத்தாலும் முக்தியை அடையமாட்டான். ஞானம் ஒன்றினால்தான் முக்தி ஏற்படும். பலனை விரும்பாமல் செய்யும் புண்ய கர்மாக்கள் சித்தசுத்தியை உண்டுபண்ணி ஞானத்திற்கு ஸாதனமாகின்றன. புண்ய கர்மாக்களைச் செய்து அதனால் பாபமழிந்து சித்தசுத்தியை அடைந்து

குருவைத் தேடி உபநிஷத்துக்கள் மூலமாக ஆத்மவிசாரம் செய்து ஞானமேற்பட்டால்தான் மோக்ஷத்தையடையலாம். அதல்லாமல் பலனை விரும்பி எத்தனையோ பிறவிகளில் எவ்வளவு கர்மாக்களைச் செய்தாலும் சித்தசுத்தி மூலமாக ஞானம் ஏற்படாததால் அவன் மோக்ஷத்தை அடைய முடியாது. (17)

**सुरमन्दिरतरुमूलनिवासः शय्या भूतलमजिनं वासः ।**
**सर्वपरिग्रहभोगत्यागः कस्य सुखं न करोति विरागः ॥ १८ ॥**

ஸுரமந்திர தருமூல நிவாஸ:
 ஶய்யா பூதலம ஜிநம் வாஸ: ।
ஸர்வ பரிக்ரஹ போக த்யாக:
 கஸ்ய ஸுகம் ந கரோதி விராக: ॥

**सुरमन्दिर**-தேவாலயம், **तरुमूल**-மரத்தினடி இவற்றில், **निवासः**-வாஸம், **भूतलं**-பூமியின் தரையே, **शय्या**-படுக்கை, **अजिनं**-மான்தோல், **वासः**-ஆடை, **सर्वपरिग्रह**-எல்லாப்பொருள்களின், **भोग**-போகத்தையும், **त्यागः**-விட்டுவிடுதல் (இம்மாதிரியான), **विराग**-வைராக்யம், **कस्य**-யாருக்குத்தான், **सुखं**-ஆனந்தத்தை, **न करोति**-செய்கிறதில்லை.

தேவாலயங்கள், மரத்தினடி இவைகளில் வாஸம், பூமியே படுக்கை, உடுப்பது மான் தோல், எல்லாப் பொருள்களையும் அதன் போகத்தையும் விட்டுவிடுதல் இவ்விதமான ஆசையற்ற தன்மையானது யாருக்குத்தான் ஸுகத்தைக் கொடுக்காது! எல்லோருக்கும் ஸுகத்தையே கொடுக்கும். ஆசையுடன் பொருள்களை சம்பாதிப்பதாலும், அதைக் காப்பாற்றுவதாலும், அதை அனுபவிப்பதாலும், அவைகள் நம்மைவிட்டுப் பிரிவதாலும்தான் துன்பங்கள் எல்லாம் ஏற்படுகின்றன ஆசையையொழித்தால் துன்பமேயில்லை. ஸுகமும் ஏற்படுகிறது. (18)

**योगरतो वा भोगरतो वा सङ्गरतो वा सङ्गविहीनः ।**
**यस्य ब्रह्मणि रमते चित्तं नन्दति नन्दति नन्दत्येव ॥ १९ ॥**

யோக ரதோ வா போக ரதோ வா
ஸங்க ரதோ வா ஸங்க விஹீந: |
யஸ்ய ப்ரஹ்மணி ரமதே சித்தம்
நந்ததி நந்ததி நந்தத்யேவ ||

**योगरतो वा**-யோகத்தில் ஈடுபட்டாலும், **भोगरतो वा**-போகத்தில் ஈடுபட்டாலும், **सङ्गरतो वा**-ஜனஸங்கத்தில் ஈடுபட்டாலும், **सङ्गविहीनः**-ஸங்கம் இல்லாமலிருந்தாலும், **यस्य**-எவனுடைய, **चित्तं**-மனம், **ब्रह्मणि**-ப்ரஹ்மத்தில், **रमते**-இன்புறுகிறதோ, (அவன்), **नन्दति नन्दति नन्दत्येव**-எப்பொழுதும் ஆனந்தமாகவே இருப்பான்.

யோகாப்யாஸத்தில் ஈடுபட்டிருந்தாலும், விஷயங்களை அனுபவிப்பதில் ஈடுபட்டிருந்தாலும், உலகத்தாரோடு ஸங்கமுள்ளவனுயிருந்தாலும், அதை விட்டு ஏகாந்தத்திலிருந்தாலும் எவனுடைய மனது பரப்ரஹ்மத்திலேயே ரமித்துக் கொண்டிருக்கிறதோ அவன் எப்பொழுதும் நிச்சயமாக ஆனந்தமாகவே இருப்பான். ஆத்மஞானத்தை அடைந்த ஜீவன்முக்தன் எந்த நிலையிலிருந்தாலும் அவன் மனது எப்பொழுதும் ப்ரஹ்மத்திலேயே ஈடுபட்டிருக்குமாதலால் அவன் ஆத்மானந்த பரிதனுகவேயிருப்பான். (19)

**भगवद्गीता किंचिदधीता गङ्गाजललवकणिका पीता ।**
**सकृदपि येन मुरारिसमर्चा क्रियते तस्य यमेन न चर्चा ॥**

பகவத்கீதா கிஞ்சிததீதா
கங்காஜல லவ கணிகா பீதா |
ஸக்ருதபி யேந முராரி ஸமர்ச்சா
க்ரியதே தஸ்ய யமேந ந சர்சா ||

**येन**-எவனுல், **भगवद्गीता** பகவத்கீதையானது, **किंचित्**-கொஞ்சம், **अधीता**-படித்துத் தெரிந்துகொள்ளப்பட்டதோ. **गङ्गाजल**-கங்காதீர்த்தத்தின், **लवकणिका**-திவிலையின் துளியானது, **पीता** பானம் செய்யப்பட்டதோ. **सकृदपि**-ஒரு

தடவையாவது, मुरारिसमर्चा-முரனைக்கொன்ற கோவிந்த னுடைய பூஜை செய்யப்பட்டதோ, तस्य - அவனுடைய, चर्चा-விசாரம் यमेन-யமனுல், न क्रियते-செய்யப்படுகிறதில்லை.

எவனுல் ஸ்ரீமத் பகவத்கீதை கொஞ்சமாவது அத்யயனம் செய்யப்பட்டிருக்கிறதோ, கங்கா தீர்த்தத்தில் ஒரு திவிலையாவது பானம் செய்யப்பட்டிருக்கிறதோ, ஒரு தடவையாவது முராரியான ஸ்ரீ கிருஷ்ணருடைய ஆராதனம் செய்யப்படுகிறதோ அவனைப்பற்றிய புண்ய-பாப விசாரம் யமதர்மராஜாவால் செய்யப்படுவதில்லை. யமபயம் நீங்கி விடுகிறது. (20)

पुनरपि जननं पुनरपि मरणं पुनरपि जननीजठरे शयनम् ।
इह संसारे बहुदुस्तारे कृपयाऽपारे पाहि मुरारे ॥ २१ ॥

புநரபி ஜநநம் புநரபி மரணம்
புநரபி ஜநநீ ஜடரே ஶயநம் ।
இஹ ஸம்ஸாரே பஹுதுஸ்தாரே
க்ருபயாऽபாரே பாஹி முராரே ॥

पुनरपि-திரும்பவும், जननं-பிறப்பு, पुनरपि-திரும்பவும், मरणं-சாவு, पुनरपि-திரும்பவும், जननीजठरे-தாயின் வயிற்றில் शयनं-படுக்கை, बहुदुस्तारे-பலராலும் பல உபாயங்களாலும் தாண்டமுடியாததும், अपारे - கரையில்லாததுமான, इह संसारे-இந்த ஸம்ஸார ஸாகரத்தில், मुरारे-முரனைக் கொன்ற கிருஷ்ணு, कृपया-தயவினுல், पाहि-காப்பாற்று.

திரும்பத் திரும்ப பிறப்பதும், மறுபடியும் சாவதும், மறுபடியும் தாயின் வயிற்றில் படுப்பதும், (கர்ப்பத்தில் வஸிப்பதும்) இவ்விதமான தாண்டுவதற்கு அதிக சிரமம் உள்ளதும் கரையில்லாததுமான இந்த ஸம்ஸாரஸாகரத்தில் முரனென்னும் அஸுரனைக் கொன்ற கோவிந்தா! தயவால் காப்பாற்று. கோவிந்தருடைய கிருபை இருந்தால்தான் கர்ப்பவாஸம், பிறப்பு, இறப்பு என்ற ஸம்ஸாரத்தைத் தாண்டி பிறப்பு இறப்பற்ற நிலையை அடையமுடியும். (21)

रथ्याकर्पटविरचितकन्थः पुण्यापुण्यविवर्जितपन्थाः ।
योगी योगनियोजितचित्तो रमते बालोन्मत्तवदेव ॥ २२ ॥

ரத்யா கர்பட விரசித கந்த:
புண்யாபுண்ய விவர்ஜித பந்தா: ।
யோகீ யோக நியோஜித சித்தோ
ரமதே பாலோன்மத்தவதேவ ॥

**रथ्याकर्पटविरचितकन्थः**-வீதியிலுள்ள கிழிசல் துணியையே ஆடையாக உடுத்திக்கொண்டவனும், **पुण्यापुण्य-विवर्जितपन्थाः** - புண்யம், பாபம் இவ்விரண்டும் இல்லாத வழியில் செல்கின்றவனும், **योगनियोजितचित्तः**-யோகாப்யாஸத்தில் மனதைச் செலுத்தியவனுமான, **योगी**-யோகியானவன், **बालोन्मत्तवदेव**-சிறுவன்போலும் பைத்யம் பிடித்தவன்போலும் **रमते**-ஆனந்தமாக இருக்கிறார்.

வீதியில் கிடக்கும் கந்தைத் துணியை ஆடையாக உடுத்திக்கொண்டவனும், புண்யம் பாபம் இவ்விரண்டுமற்ற மோக்ஷவழியில் செல்கிறவனும் ஞானயோகத்தில் மனதைச் செலுத்தியவனுமான யோகியானவர் சிறுவன், பைத்யம் பிடித்தவன் இவர்களைப்போல எப்பொழுதும் ஆனந்தமாய் இருக்கிறான். (22)

कस्त्वं कोऽहं कुत आयातः का मे जननी को मे तातः ।
इति परिभावय सर्वमसारं विश्वं त्यक्त्वा स्वप्नविचारम् ॥

கஸ்த்வம் கோऽஹம் குத ஆயாத:
கா மே ஜனனீ கோ மே தாத: ।
இதி பரிபாவய ஸர்வமஸாரம்
விச்வம் த்யக்த்வா ஸ்வப்ன விசாரம் ॥

**स्वप्नविचारं**-ஸ்வப்னம் போன்றதும், **असारं**-ஸாரமற்றதுமான, **विश्वं सर्वं**-பிரபஞ்சம் எல்லாவற்றையும், **त्यक्त्वा**-விட்டுவிட்டு, **त्वं**-நீ, **कः**-யார்? **अहं**-நான், **कः**-யார்? **कुतः**-எங்கிருந்து, **आयातः**-வந்தவன்? **मे जननी**-என் தாயார், **का**-

யார்? मे-என், तातः-தந்தை, कः-யார்? इति-என்று, परिभावय-விசாரணை செய்.

ஸ்வப்னம் போன்றதும் ஸாரமற்றதுமான உலக மெல்லாவற்றையும் விட்டு விட்டு ஸ்வப்னம்போல ஜாக்ரத் பிரபஞ்சத்தையும் பொய்யென்று தீர்மானித்து அதில் அபி மானம் கொள்ளாமல் நீ யார்? நான் யார்? எங்கிருந்து வந்தேன்? என்னுடைய தாயார் என்பவள் யார்? என் னுடைய தந்தை யென்பவர் யார் என்று நன்கு விசாரணை செய். ஸ்வப்னத்திற்கு ஒப்பாக பிரபஞ்சத்தை பொய்யென்று தீர்மானித்து நமக்கும் அதற்கும் ஒருவித ஸம்பந்தமும் இல்லை என்பதை விசாரித்து அறிந்துகொள். (23)

त्वयि मयि चान्यत्रैको विष्णुर्व्यर्थं कुप्यसि मय्यसहिष्णुः ।
सर्वस्मिन्नपि पश्यात्मानं सर्वत्रोत्सृज भेदज्ञानम् ॥ २४ ॥

த்வயி மயி சாந்யத்ரைகோ விஷ்ணு:
வ்யர்த்தம் குப்யஸி மய்யஸஹிஷ்ணு: ।
ஸர்வஸ்மிந்நபி பச்யாத்மாநம்
ஸர்வத்ரோத்ஸ்ருஜ பேதஞானம் ॥

त्वयि-உன்னிடமும், मयि-என்னிடமும், अन्यत्र च-மற்ற இடத்திலும், एकः विष्णुः-விஷ்ணு ஒருவரே (இருக்கிறார்). असहिष्णुः-பொறுமை இல்லாதவனாக, मयि-என்னிடம், व्यर्थं-வீணாக, कुप्यसि-நீ கோபமடைகிறாய். सर्वस्मिन्नपि-எல்லோ ரிடத்திலும், आत्मानं-தன் ஸ்வரூபத்தை, पश्य-பார். सर्वत्र-எங்கும், भेदज्ञानं-வேற்றுமை ஞானத்தை, उत्सृज-விட்டுவிடு.

உன்னிடத்திலும் என்னிடத்திலும் மற்ற இடத்திலும் எங்கும் வியாபித்து இருக்கின்ற விஷ்ணு ஒருவரே இருக் கிறார். பொறுமையில்லாதவனாய் வீணாக என்னிடம் கோபம் கொள்கிறாய். எல்லாரிடத்திலும் உன் ஆத்ம வஸ்துவைப் பார். எங்கும் வேற்றுமை அறிவை விட்டுவிடு. விஷ்ணு என்றால் வியாபகர் என்று பொருள். அவரே எல்லா சரீரத்திலு மிருக்கிறார். நமது ஆத்மாவும் அவரே. இவ்விதமான உறுதி

ஏற்பட்டு வேற்றுமை நீங்கிவிட்டால் எங்கும் தன் ஆத்மாவையே பார்க்கிற அவனிடம் கோபம் பொறுமை முதலிய தோஷங்கள் அணுகாது. (24)

**शत्रौ मित्रे पुत्रे बन्धौ मा कुरु यत्नं विग्रहसन्धौ ।**
**भव समचित्तः सर्वत्र त्वं वाञ्छस्यचिराद्यदि विष्णुत्वम् ॥**

ஶத்ரௌ மித்ரே புத்ரே பந்தௌ
மா குரு யத்நம் விக்ரஹ ஸந்தௌ ।
பவ ஸமசித்தஃ ஸர்வத்ர த்வம்
வாஞ்சஸ்யசிராத் யதி விஷ்ணுத்வம் ॥

**शत्रौ**-எதிரியிடமும், **मित्रे**-நண்பனிடமும், **पुत्रे**-புதல்வனிடத்திலும், **बन्धौ**-உறவினரிடத்திலும், **विग्रहसन्धौ**-சண்டையிலும் ஸமாதானத்திலும், **यत्नं**-முயற்சியை, **मा कुरु**-செய்யாதே. **अचिरात्**-விரைவில், **विष्णुत्वं**-விஷ்ணுஸ்வருபமாக ஆகும் தன்மையை, **यदि वांछसि**-அடையவிரும்புவாயேயானால், **त्वं**-நீ, **सर्वत्र**-எங்கும், **समचित्तः**-ஸமமான எண்ணமுடையவனாக, **भव**-இரு.

சீக்கிரமாக விஷ்ணுவாயிருக்கும் தன்மையை, எங்கும் வியாபகமான பரப்ரஹ்ம நிலையை அடைய நீ விரும்புவாயேயானால் எதிரியிடமும், நண்பனிடமும், பிள்ளையிடமும், உறவினரிடமும் சண்டையிடுவதிலும் சேர்ந்திருப்பதிலும் முயற்சி செய்யாதே. சத்ருவிடம் சண்டையிடுதல், நண்பன் முதலியவரோடு சேர்ந்திருத்தல் என்ற வேற்றுமை பாராட்டாதே. எங்கும் ஸமமான எண்ணமுடையவனாக இரு. (25)

**कामं क्रोधं लोभं मोहं त्यक्त्वात्मानं भावय कोऽहम् ।**
**आत्मज्ञानविहीना मूढास्ते पच्यन्ते नरकनिगूढाः ॥ २६ ॥**

காமம் க்ரோதம் லோபம் மோஹம்
த்யக்த்வாऽऽத்மாநம் பாவய கோऽஹம் ।
ஆத்மஞான விஹீநா மூடாஸ்
தே பச்யந்தே நரக நிகூடாஃ ॥

कामं-ஆசையையும், क्रोधं-கோபத்தையும், लोभं-பேராசையையும், मोहं-மோஹத்தையும், त्यक्त्वा-விட்டு, 'अहं-நான், कः-யார்' (என்று), आत्मानं-தன் ஸ்வரூபத்தை, भावय-விசாரணை செய். आत्मज्ञानविहीनाः-ஆத்மஞானம் இல்லாத, ते-அந்த, मूढाः-மூடர்கள், नरकनिगूढाः-நரகத்தில் தனியாக இருந்து, पच्यन्ते-துன்புறுத்தப்படுகிறார்கள்.

காமம், கோபம், லோபம், மோஹம் இவைகளை விட்டு விட்டு நான் யார்? என்று தன்னைப்பற்றி நன்கு விசாரணை செய். ஆத்மஞானத்தைப் பெறாத மூடர்கள் நரகத்தில் (ஸம்ஸாரத்தில்) அகப்பட்டுத் துன்புறுகிறார்கள். நம்மிடம் இல்லாத பொருளை வேண்டுவது காமம். நாம் அதை அடைய முயற்சிக்கும்போது அதற்கு இடைஞ்சல் செய்கிறவனிடம் நமக்கு கோபம் ஏற்படுகிறது. காமமே கோபமாய் மாறிவிடுகிறது. கிடைத்தது போதாதென்றும், கிடைத்த பொருள் நம்மிடம் எப்பொழுதும் இருக்கவேண்டுமென்றும் நினைப்பது லோபம். விஷயங்களின் ஸ்வரூபத்தை நன்கு ஆராய்ந்தறியாமல் இருப்பது மோஹம். (26)

गेयं गीतानामसहस्रं ध्येयं श्रीपतिरूपमजस्रम् ।
नेयं सज्जनसङ्गे चित्तं देयं दीनजनाय च वित्तम् ॥ २७ ॥

கேயம் கீதா நாம ஸஹஸ்ரம்
த்யேயம் ஸ்ரீபதிரூபமஜஸ்ரம் ।
நேயம் ஸஜ்ஜந ஸங்கே சித்தம்
தேயம் தீந ஜநாய ச வித்தம் ॥

गीतानामसहस्रं-பகவத்கீதையும் ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், गेयं-பாராயணம் செய்யத்தக்கது. श्रीपतिरूपं-லக்ஷ்மீ காந்தனின் ஸ்வரூபம், अजस्रं-எப்பொழுதும், ध्येयं-தியானிக்கத்தக்கது. सज्जनसङ्गे-நல்லோர்களின் சேர்க்கையில், चित्तं-மனது, नेयं-செலுத்தத்தக்கது. दीनजनाय-ஏழை ஜனங்களுக்கு, वित्तं-பணம், देयं-கொடுக்கத்தக்கது.

பகவத்கீதையையும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தையும் ப்ரதிதினம் பாராயணம் செய்யவேண்டும். லெக்ஷ்மீபதியான ஸ்ரீமந்நாராயணனுடைய ஸ்வரூபத்தை எப்பொழுதும் தியானம் செய்யவேண்டும். ஸாதுஜனங்களின் ஸங்கத்தில் மனதை செலுத்தவேண்டும். ஏழை ஜனங்களுக்கு பொருளை கொடுக்கவேண்டும். (27)

**सुखतः क्रियते रामाभोगः पश्चाद्धन्त शरीरे रोगः ।**
**यद्यपि लोके मरणं शरणं तदपि न मुञ्चति पापाचरणम् ॥**

ஸுகத: க்ரியதே ராமா போக:
பச்சாத் ஹந்த ஶரீரே ரோக: ।
யத்யபி லோகே மரணம் ஶரணம்
ததபி ந முஞ்சதி பாபாசரணம் ॥

**सुखतः**–ஸுகமாக, **रामाभोगः**–பெண்களின் போகம் **क्रियते**–(முதலில்) செய்யப்படுகிறது. **पश्चात्**–பின்னால், **हन्त**–ஐயோ, **शरीरे**–சரீரத்தில், **रोगः**–வியாதி ஏற்படுகிறது. **लोके**–உலகில், **मरणं**–சாவானது, **यद्यपि शरणं**–புகலிடமாயிருப்பினும், **तदपि**–அப்படியிருந்தும், **पापाचरणं**–பாபச்செயல், **न मुञ्चति**–விடுவதில்லை.

ஸுகமென்ற நினைப்பால் முதலில் பெண்களோடு சேர்ந்து அனுபவிக்கப்படுகிறது. ஐயோ! பின்னால் சரீரத்தில் வியாதி உண்டாகிறது. உலகத்தில் சாவுதான் துன்பத்திலிருந்து விடுவிக்கிறது. ஆனாலும் பாபம் செய்வதை விடுவதில்லை. உலகத்தில் காமத்தையே புருஷார்த்தமாக எண்ணி தர்மத்தை விட்டு பாபங்களைச் செய்து ஸ்திரீகளை அடைந்து ரமிக்கிறார்கள். ஸ்வல்ப ஸுகம் ஏற்படுகிறது. பிறகு அதன் காரணமாக தேஹத்தில் பல வியாதிகள் ஏற்பட்டு குணமேற்படாமல் அதனாலேயே சாகிறார்கள். சாவுதான் பிணித் துன்பத்திலிருந்து காப்பாற்றுகிறது. இவ்விதம் நேரிற்கண்டும் பாபத்தையே செய்கிறார்கள், (28)

**अर्थमनर्थं भावय नित्यं नास्ति ततः सुखलेशः सत्यम् ।**
**पुत्रादपि धनभाजां भीतिः सर्वत्रैषा विहिता रीतिः ॥ २९ ॥**

அர்த்தமநர்த்தம் பாவய நித்யம்
நாஸ்தி தத: ஸுகலேச: ஸத்யம் |
புத்ராதபி தநபாஜாம் பீதி:
ஸர்வத்ரைஷா விஹிதா ரீதி: ||

**अर्थं**–செல்வத்தை, **अनर्थं**–தீங்காக, **नित्यं**–எப்பொழுதும், **भावय**–நினைத்துக்கொள். **ततः**–அந்தப் பணத்தினால், **सुखलेशः**–சிறிது ஸுகம் கூட **नास्ति**–இல்லை. **सत्यं**–இது உண்மை. **धनभाजां**–பணம் படைத்தவர்களுக்கு, **पुत्रादपि**–புதல்வனிடமிருந்தும், **भीतिः**–பயம் ஏற்படும். **एषा रीतिः**–இந்த முறை, **सर्वत्र**–எங்கும், **विहिता**–ஏற்பட்டிருக்கிறது.

செல்வத்தை எப்பொழுதும் ஆபத்தாக (ஆபத்திற்கு மூலமாக) நினைத்துக்கொள். அதிலிருந்து உண்மையில் சிறிதுகூட ஸுகம் ஏற்படுவதில்லை. செல்வம் படைத்தவர்களுக்கு தனக்கு மிகவும் பிரியமான பிள்ளையிடமிருந்தும் பயமேற்படுகிறது. இந்த ரீதி எங்கும் ஏற்பட்டிருக்கிறது. பேராசையால் பலவித வழிகளாலும் பணத்தைத் தேடுபவர்கள் எப்பொழுதும் துன்பத்தையே அடைகிறார்கள். பணத்தை ஸம்பாதிக்கும்பொழுதும் கஷ்டம். அதைக் காப்பாற்றுவதிலும் சங்கடம், பயம். செல்வத்தைச் செலவு செய்யும்பொழுதும் மனதில் வருத்தம். **अमेधसो हि श्रीरनर्थाय भवति)** புத்தியற்ற மூடனுக்கு ஐச்வர்யம் அனர்த்தத்தைக் கொடுக்கிறது, என்று ஆசார்யாள் சொல்லியிருக்கிறபடி. புத்தியற்ற மூடனாயிருந்தால் கெட்ட வழிகளில் பணம் சிலவழிந்து வியாதி சஞ்சலம் முதலியவை உண்டாவதுடன் பாபமூட்டைகளும் பெருகுகின்றன. செலவு செய்யாமல் லோபித்தனத்தால் சிரமப்பட்டு காப்பாற்றி வந்தாலும் அஸத்தான பிள்ளைகள் ஏற்பட்டு இவனிடமிருந்து அதிகாரத்தையும், பணத்தையும் பிடுங்க முயற்சிக்கிறார்கள். அவர்களை அடக்க சக்தியற்று எப்பொழுதும் அவர்களிட

மிருந்து பயந்துகொண்டே இருக்கிருன். கடைசியில் பிள்ளைகள் இவனிடமிருந்து பணத்தைப் பிடுங்கி இவன் பார்க்கும்பொழுதே கண்டபடி சிலவு செய்கிருர்கள். இவ்விதம் எப்பொழுதும் பணத்தால் துன்பம்தான். சிறிதுகூட ஸுகமில்லை. ஆதலால் பணத்தால் ஸுகம் கிடைக்குமென்று ஏமாந்து அதில் பேராசை வைக்காதே. (29)

प्राणायामं प्रत्याहारं नित्यानित्यविवेकविचारम् ।
जाप्यसमेतसमाधिविधानं कुर्ववधानं महदवधानम् ।। ३० ।।

ப்ராணுயாமம் ப்ரத்யாஹாரம்
நித்யாநித்ய விவேக விசாரம் ।
ஜாப்ய ஸமேத ஸமாதி விதாநம்
குர்வவதாநம் மஹதவதானம் ॥

**प्राणायामं**-பிராணுயாமம் (சுவாஸத்தை அடக்குதல்) **प्रत्याहारं**-புலன்களை அடக்குதல், **नित्यानित्यविवेकविचारं**-இது நித்யம், இது அநித்யம் என்ற பகுத்தறிவுடன் ஆத்மவிசாரம் **जाप्यसमेत**-மந்திர ஜபத்துடன்கூடிய, **समाधिविधानं**-ஸமாதியைச்செய்தல் இவற்றில், **महदवधानं**-மிகுந்த ஜாக்ரதையுடன் **अवधानं कुरु**-மனதைச்செலுத்து.

ப்ராணுயாமம் (ரேசகம், பூரகம், கும்பகம் என்ற முறையில் ப்ராணவாயுவை அடக்குதல்), ப்ரத்யாஹாரம் (சப்தம் முதலிய விஷயங்களிலிருந்து மனதை இழுத்தல்), ஆத்மா நித்யம் (ஸத்யம்) ப்ரபஞ்சம் அநித்யம் (அஸத்யம்) என்று பகுத்தறிந்து விசாரித்தல், குருவினுல் உபதேசிக்கப்பட்ட மந்திரங்களை ஜபிப்பதுடன் ஸமாதியை அப்யஸித்தல் இவைகளில் மிகுந்த ஜாக்ரதையுடன் மனதைச் செலுத்து. யமம், நியமம், ஆஸனம், ப்ராணுயாமம், ப்ரத்யாஹாரம், தாரணு, த்யானம் ஸமாதி என்று எட்டு அங்கங்கள் கொண்டது யோகம். இதைத்தான் அஷ்டாங்க யோகம் என்று சொல்வார்கள். இதில் இங்கு மூன்று கூறப்பட்டிருக்கிறது. மீதி ஐந்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். இதேபோல ஆத்ம விசாரம் செய்வதற்கு அங்கமாக நான்கு ஸாதனங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

நித்யாநித்ய வஸ்து விவேகம், இஹாமுத்ரார்த்த பலபோக விராகம், சமாதி ஷட்கஸம்பத்து, முமுக்ஷுத்வம். இவைகளில் இங்கு ஒன்று கூறப்பட்டிருக்கிறது. மீதி மூன்றையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். அஷ்டாங்க யோகாப்யாஸம் செய்து மனதை அடக்கி ஸமாதியில் இருக்கவேண்டும். நித்யாநித்ய வஸ்து விவேகம் முதலான நான்கு ஸாதனங்களைக் கைக்கொண்டு ஆத்மவிசாரம் செய்யவேண்டும். (30)

गुरुचरणाम्बुजनिर्भरभक्तः संसारादचिराद्भव मुक्तः ।
सेन्द्रियमानसनियमादेवं द्रक्ष्यसि निजहृदयस्थं देवम् ॥ ३१ ॥

குருசரணும்புஜ நிர்பர பக்த:
ஸம்ஸாராதசிராத் பவ முக்த: ।
ஸேந்த்ரிய மாநஸ நியமாதேவம்
த்ரக்ஷ்யஸி நிஜ ஹ்ருதயஸ்தம் தேவம் ॥

**गुरुचरणाम्बुजनिर्भरभक्तः**-குருவின் சரணாரவிந்தங்களில் மிகுந்த பக்தி உள்ளவனாக இருந்து, **अचिरात्**-விரைவில், **संसारात्**-ஸம்ஸாரத்திலிருந்து, **मुक्तः**-விடுபட்டவனாக, **भव**-இரு, **एवं**-இவ்வாறு, **सेन्द्रियमानसनियमात्**-இந்திரியங்களுடன் கூடிய மனதை அடக்குவதால், **निजहृदयस्थं**-தன் ஹிருதயத்திலுள்ள, **देवं**-ஈசுவரனை, **द्रक्ष्यसि**-பார்ப்பாய்.

ஸ்ரீ ஸத்குருவின் பாதாரவிந்தங்களில் மிகுந்த பக்தி உடையவனாக சீக்கிரமாக ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டவனாக இரு. இந்திரியங்களையும் மனதையும் அடக்குவதால் தான் தன் ஹிருதயத்தில் பரமாத்மாவைப் பார்ப்பாய், இவ்விதம் நன்கு விசாரணைசெய்து தேஹம், மனைவி, பிள்ளை, பணம் முதலியவைகளில் ஆசையையொழித்து இந்திரியங்களையும் மனதையும் அடக்கி ஸ்ரீ ஸத்குருவின் சரணாரவிந்தங்களை மனதிலிருத்தி த்யானம் செய்தால் சுலபமாகவும் சீக்கிரமாகவும் ஆத்ம ஸாக்ஷாத்காரத்தையடைந்து ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிறான். எல்லாவற்றிற்கும் குருபக்திதான் மூலம். (31)

பஜகோவிந்தம் முற்றும்.

॥ श्रीः ॥

# ॥ षट्पदीस्तोत्रम् ॥

# ஷட்பதீ ஸ்தோத்ரம்

[ஷட்பதீ ஸ்தோத்திரம் ஏழு சுலோகங்கள் கொண்டது—முதல் சுலோகத்தில் தன்னிடமுள்ள அவிநயம், ஆசை இவற்றைப் போக்கி, மனதை அடங்கச் செய்து பூததயை ஏற்படச்செய்து பிறவிக்கடலிலிருந்து அக்கரை சேர்க்கும்படி பிரார்த்தித்து, இரண்டாவதில் பகவச் சரணங்களை வணங்குகிறார். 3-வதில் ஸமுத்ர த்ருஷ்டாந்தத்தால் தான் பகவத் சேவகன் என்பதை உறுதிப்படுத்தி 4, 5, 6 சுலோகங்களில் பகவானுடைய பெருமைகளையும் லோகரக்ஷணத்தையும் காட்டி, தன் பயத்தையும் துன்பத்தையும் போக்கும்படி வேண்டிக்கொண்டு கடைசி சுலோகத்தில் பகவச் சரணாரவிந்தத்தில் சரணம் செய்கிறார். இதில் காட்டியுள்ள மந்திரத்தை அநுஸந்தானம் செய்தால் நிச்சயம் பகவதநுக்ரஹம் பெறலாம்.]

अविनयमपनय विष्णो दमय मनः शमय विषयमृगतृष्णाम् ।
भूतदयां विस्तारय तारय संसारसागरतः ॥ १ ॥

அவிநயமபநய விஷ்ணோ
தமய மந: ஶமய விஷய ம்ருகத்ருஷ்ணாம் ।
பூத தயாம் விஸ்தாரய
தாரய ஸம்ஸார ஸாகரத: ॥

**विष्णो**-விஷ்ணுவே, **अविनयं**-(என்) அஹங்காரத்தை, **अपनय**-போக்குங்கள். **मनः**-(என்) மனதை, **दमय**-அடங்கும்படி செய்யுங்கள். **विषयमृगतृष्णां**-விஷயங்களிலுள்ள ஆசையை, **शमय**-போக்குங்கள். **भूतदयां**-பிராணிகளின்பேரில் இரக்கத்தை, **विस्तारय**-பெருகும்படி செய்யுங்கள். **संसारसागरतः**-பிறவிக்கடலிலிருந்து, **तारय**-கடைத்தேறச் செய்யுங்கள்.

எங்கும் நிறைந்து எல்லா வல்லமையும் பொருந்தி எல்லோருடைய மனத்திலும் விளங்கும் ஹே விஷ்ணுவே,

திரும்பித் திரும்பி பிறப்பதும் சாவதுமாகிய இந்த ஸம்ஸார ஸாகரத்தில் அகப்பட்டுத் தத்தளிக்கும் என்னை அக்கரை சேர்க்கவேண்டும். இதற்கு இடைஞ்சலாக என்னிடம் இருக்கும் எல்லா தோஷங்களையும் தாங்கள்தான் போக்கியருளவேண்டும். விஷயங்களிலுள்ள ஆசையைப் போக்கி, மனதை அடங்கச்செய்து, அஹங்காரத்தையும் போக்க வேண்டும். எல்லா பிராணிகளிடமும் தாங்கள் இருப்பது தெரிந்து என் மனதில் இரக்கம் உண்டாகும்படி செய்ய வேண்டும். விஷயங்களில் ஆசை, அதனுல் மனம் எங்கும் அலேவது, அஹங்காரம், மற்றவரை அவமதிப்பது இவையே எல்லாத் துன்பங்களுக்கும் காரணம். இவற்றை நீக்கும்படி பகவானை வேண்டுகிருர். ஸர்வசக்தராக என் மனதில் வஸிக்கும் தங்களுக்குத்தான் இந்தத் திறமை உண்டு என்பதை '**विष्णो**' என்ற ஸம்போதனத்தால் காட்டுகிருர். (1)

**दिव्यधुनीमकरन्दे परिमलपरिभोगसच्चिदानन्दे ।**
**श्रीपतिपदारविन्दे भवभयखेदच्छिदे वन्दे ॥ २ ॥**

திவ்யதுநீ மகரந்தே
பரிமள பரிபோக ஸச்சிதாநந்தே ।
ஸ்ரீபதி பதாரவிந்தே
பவபய கேதச்சிதே வந்தே ॥

**दिव्यधुनीमकरन्दे**—ஆகாசகங்கையை மகரந்தமாகக் (புஷ்ப ரஸமாக)கொண்டவைகளும், **परिमलपरिभोगसच्चिदानन्दे**—ஸச்சிதானந்தத்தை வாஸனையாகக்கொண்டவைகளும், **भवभयखेदच्छिदे**-ஸம்ஸாரபயத்தாலுண்டாகும் துன்பத்தை அழிக்கின்றவைகளுமான, **श्रीपतिपदारविन्दे**-லெக்ஷ்மீபதியின் இரு சரணரவிந்தங்களையும், **वन्दे**-வணங்குகிறேன்.

ஆகாச கங்கையை மகரந்தமாகக் கொண்டவைகளும் ஸச்சிதானந்த ஸ்வரூபத்தை வாஸனையாகக் கொண்டவைகளும் ஸம்ஸார பயத்தால் உண்டாகும் துன்பத்தை அழிக்கின்றவைகளுமான லெக்ஷ்மீபதியின் இரு சரணரவிந்தங்களையும் வணங்குகிறேன்,

தான் என்ற அஹங்காரமும், என்னுடையது என்ற மமகாரமும் இருக்கும்வரை மனம் அடங்காது. விஷயங்களில் ஆசை குறையாது. சுயநலத்தையே மேலானதாக எண்ணுபவனுக்கு பிராணிகளிடம் இரக்கமும் ஏற்படாது. இந்த அஹங்கார மமகாரங்களை நீக்கும்படி முதல் சுலோகத்தில் வேண்டினர். இதற்காகவே தன் நிலையை மறந்து அபிமானத்தை விட்டு இந்த சுலோகத்தில் பகவச் சரணாரவிந்தத்தை வணங்குகிறார். கங்கைதான் பகவானின் திருவடித் தாமரையிலிருந்து பெருகும் மகரந்தம். ஸச்சிதானந்தஸ்வரூபம்தான் அதிலிருந்து கிளம்பி எங்கும் பரவிவரும் பரிமளம். இந்த சரணாரவிந்தமே ஸம்ஸார பயத்தையும் துன்பத்தையும் போக்கவல்லது. (2)

सत्यपि भेदापगमे नाथ तवाहं न मामकीनस्त्वम् ।
सामुद्रो हि तरङ्गः क्वचन समुद्रो न तारङ्गः ॥ ३ ॥

ஸத்யபி பேதாபகமே
நாத தவாஹம் ந மாமகீனஸ்த்வம் |
ஸாமுத்ரோ ஹி தரங்க:
க்வசந ஸமுத்ரோ ந தாரங்க: ||

नाथ-ரக்ஷகனே, भेदापगमे सत्यपि-வேற்றுமை நீங்கிய போதிலும், अहं-நான், तव-உங்களுடையவன், त्वं-நீர், न मामकीनः-என்னுடையவரல்ல. तरङ्गो हि-அலையல்லவா, सामुद्रः-ஸமுத்திரத்தைச் சேர்ந்தது. क्वचन-ஒரு இடத்திலும், समुद्रः-ஸமுத்திரம், न तारङ्गः-அலையைச் சேர்ந்ததாக இருப்பதில்லை.

ரக்ஷகனே, வேற்றுமை நீங்கியபோதிலும் நான்தான் உங்களுடையவன். நீங்கள் என்னுடையவரல்ல. அலைதான் ஸமுத்திரத்தினுடையதாய் இருக்குமே தவிர ஒரு இடத்திலாவது ஸமுத்திரம் அலையைச் சேர்ந்ததாக இருப்பதில்லை.

தான் எப்பொழுதும் பக்தன், ஸேவகன்தான் என்பதை உறுதிப்படுத்திக் கூறுகிறார், உண்மையில் உம் ஸ்வரூப

மும் என் ஸ்வரூபமும் ஒன்றுதான். ஒரே ஸச்சிதானந்த வஸ்து. ஆனாலும் நீர் நித்யமுக்தர். பெரும் தீயிலிருந்து சிறு நெருப்புப்பொறி கிளம்புவதுபோல் நான் உம்மிடமிருந்து கிளம்பியுள்ளேன். மாயையால் அல்லற்படுகிறவன். உம் கருணையால் உம் ஸ்வரூபத்தை அடையப்போகிறேன். ஆகையால் அல்பனான நான் எப்பொழுதும் மஹானான உம்முடையவன்தான். நீர் என்னுடையவர் என்பது இல்லை. ஸமுத்திரத்திலிருந்து கிளம்பும் அலை ஜலஸ்வரூபமாக இருந்து உண்மையில் கடலைக்காட்டிலும் வேறாக இல்லாமலிருந்தாலும் ஸமுத்திரத்தைச் சேர்ந்தது அலை என்று சொல்கிறார்களே தவிர, அலையைச் சேர்ந்தது ஸமுத்திரம் என்று ஒருவரும் சொல்வதில்லை. (3)

उद्धृतनग नगभिदनुज दनुजकुलामित्र मित्रशशिदृष्टे ।
दृष्टे भवति प्रभवति न भवति किं भवतिरस्कारः ॥ ४ ॥

உத்த்ருத நக நகபிதனுஜ
தனுஜ குலாமித்ர மித்ர ஶஶி த்ருஷ்டே ।
த்ருஷ்டே பவதி ப்ரபவதி
ந பவதி கிம் பவதிரஸ்கார: ॥

**उद्धृतनग**-மலையைத் தூக்கியவரே, **नगभिदनुज**-மலைகளின் சிறகை வெட்டிய தேவேந்திரனின் தம்பியே, **दनुजकुलामित्र**-அஸுரக் கூட்டத்திற்கு சத்ருவே, **मित्रशशिदृष्टे**-ஸூரியனையும் சந்திரனையும் கண்களாகக்கொண்டவரே **प्रभवति**-மிகுந்த செல்வாக்குள்ள, **भवति**-நீர், **दृष्टे**-பார்க்கப் பட்டுவிட்டால், **भवतिरस्कारः**-ஸம்ஸாரத்தின் நிவிருத்தி, **किं न भवति**-ஏற்படாதா?

கோவர்த்தன மலையைத் தூக்கி ஒரு கையில் குடையாகப் பிடித்து நின்றுகொண்டு பெரும் மழையிலிருந்து கோகுலத்தைக் காப்பாற்றியவர். உலகத்துக்கே தீங்கு விளைவித்த மலைகளின் சிறகை வெட்டிக் காப்பாற்றிய த்ரிலோகாதிபதியான தேவேந்திரனின் தம்பியான உபேந்திரனல்லவா தாங்கள். துஷ்ட அஸுரகுலத்தையே

அழிப்பவர். உலகிற்கே பிரகாசத்தைக் கொடுக்கும் ஸூர்ய சந்திரர்கள் உமக்கு நேத்ரமாக விளங்குகிறார்கள். 'चन्द्र-सूर्यौ च नेत्रे' உலகிற்கே தாங்கள்தான் பிரபு. இத்தனை வல்லமையுள்ள உம்மைத் தெரிந்துகொண்டுவிட்டால் என் பிறவித்துன்பம் ஏன் விலகாது? கட்டாயம் நீங்கிவிடும். (4)

मत्स्यादिभिरवतारैरवतारवतावता सदा वसुधाम् ।
परमेश्वर परिपाल्यो भवता भवतापभीतोऽहम् ॥ ५ ॥

மத்ஸ்யாதிபிரவதாரை-
ரவதாரவதாZவதா ஸதா வஸுதாம் ।
பரமேச்வர பரிபால்யோ
பவதா பவதாபபீதோZஹம் ॥

**परमेश्वर**-பரமேசுவரனே! **मत्स्यादिभिः**-மத்ஸ்யம் முதலான **अवतारैः**-அவதாரங்களால், **अवतारवता**-அவதாரங்களுடன் கூடியவரும், **सदा**-எப்பொழுதும், **वसुधां**-பூமியை, **अवता**-காப்பாற்றுகின்றவருமான, **भवता**-உம்மால், **भवतापभीतः**-ஸம்ஸாரதாபத்திலிருந்து பயமடைந்த **अहं**-நான், **परिपाल्यः**-காப்பாற்றத்தகுந்தவன்.

துஷ்டர்களால் உலகிற்குத் துன்பம் ஏற்படும் போதெல்லாம் துஷ்டர்களை சிக்ஷிக்கவும் ஸாதுக்களைக் காப்பாற்றவும் மத்ஸ்யம் முதலான அவதாரங்களை எடுத்து, அதாவது பிறப்பே இல்லாத தாங்கள் மீன், ஆமை முதலான தாழ்ந்த பிறவிகளையும்கூட எடுத்து உலகைக் காப்பாற்றியிருக்கிறீர்கள். தாங்கள்தான் பரமேச்வரன். உலகையெல்லாம் அடக்கியாண்டு காப்பாற்றுகிறவர். ஸம்ஸார தாபத்திலிருந்து என்னைக் காப்பாற்றவேண்டியதும் உம்முடைய பொறுப்புத்தான். ஆனால் அம்மாதிரியான அவதாரம் ஒன்றும் எடுக்காமலேயே ஸுலபமாக என் பயத்தை நீக்கி என்னைக் காப்பாற்றிவிடலாம். (5)

दामोदर गुणमन्दिर सुन्दरवदनारविन्द गोविन्द ।
भवजलधिमथनमन्दर परमं दरमपनय त्वं मे ॥ ६ ॥

தாமோதர குண மந்திர
ஸுந்தர வதநாரவிந்த கோவிந்த ।
பவஜலதி மதன மந்தர
பரமம் தரமபநய த்வம் மே ॥

दामोदर–கயிற்றால் வயிற்றில் கட்டுண்டவனே, गुण-मन्दिर-நற்குணங்களுக்கு இருப்பிடமானவனே, सुन्दरवदनारविन्द–அழகிய தாமரைபோன்ற முகமுள்ளவரே, गोविन्द–கோவிந்த! भवजलधि-ஸம்ஸாரமாகிய ஸமுத்திரத்தை, मथन-கலக்குவதில், मन्दर-மந்தரமலைபோன்றவரே, मे-என்னுடைய परमं-மிகுந்த, दरं–பயத்தை, त्वं–நீர், अपनय-போக்கும்.

தாயான யசோதையால் உரலுடன் சேர்த்து கயிற்றால் தாம் கட்டப்பட்டு நளகூபரன், மணிக்ரீவன் என்ற இரு யக்ஷர்களின் துன்பத்தைப் போக்கினீர். எல்லா நற்குணங்களும் தங்களிடமே கூடியிருக்கின்றன. தங்களுக்கு பயம், துன்பம் முதலியவை ஒருபொழுதும் இல்லாததால் தங்கள் வதனம் எப்பொழுதும் தாமரைபோல அழகாகவும் பொலிவுடனும் விளங்குகிறது. பசுக்களின் துன்பத்தைப் போக்கி கோவிந்தன் என்ற பெயர் கொண்டவர். வேதங்களால் அறியத்தக்கவர். மந்தரமலை கடலைக் கலக்கியதுபோல ஸம்ஸாரஸாகரத்தை அடியுடன் கலக்கி அதனால் உண்டாகும் துன்பத்தைப் போக்குபவர். பிறவியால் ஏற்படும் பயத்தைப் போக்கி அருளவேண்டும். (6)

नारायण करुणामय शरणं करवाणि तावकौ चरणौ ।
इति षट्पदी मदीये वदनसरोजे सदा वसतु ॥ ७ ॥

நாராயண கருணாமய
ஶரணம் கரவாணி தாவகௌ சரணௌ ।
இதி ஷட்பதீ மதீயே
வதந ஸரோஜே ஸதா வஸது ॥

नारायण–நாராயணனே, करुणामय-கருணையே உருக்கொண்டவனே, तावकौ-உம்முடைய, चरणौ-இருபாதங்களை

யும், **शरणं करवाणि**–சரணம் அடைகிறேன், **इति**–என்ற, **षट्पदी**-ஆறு பதங்களின் கூட்டம், **मदीये**–என்னுடையதான **वदनसरोजे**–தாமரைபோன்ற முகத்தில், **सदा**-எப்பொழுதும், **वसतु**–வாஸம் செய்யட்டும்.

நாராயணா, கருணையே உருக்கொண்டவனே, உம் இரு சரணங்களையும் சரணம் அடைகிறேன். (1) நாராயண (2) கருணாமய (3) சரணம் (4) கரவாணி (5) தாவகௌ (6) சரணௌ என்ற இந்த ஆறு பதங்கள் சேர்ந்த வாக்யம் எப்பொழுதும் என் முகத்தில் விளங்கட்டும். இந்த சுலோகத்தில் ஆறு பதங்கள் கொண்ட பூர்வார்த்தம் (முன் பாதி) ஓர் மஹாமந்திரம். இதை எப்பொழுதும் என் வாய் சொல்லிக்கொண்டிருக்கட்டும். ஆறு கால்களுள்ள வண்டிற்கு ஷட்பதீ என்று பெயர். அது எப்பொழுதும் தாமரைப்பூவில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும். அதுபோல் ஆறு பதங்களுள்ள இந்த மஹாமந்திர ரூபமான ஷட்பதியும் என் முகத்தாமரையில் எப்பொழுதும் விளங்கிக்கொண்டிருக்கட்டும். அப்பொழுது தான் அந்த முகம் சோபையுள்ளதாகவும் பயனுள்ளதாகவும் ஆகும். (7)

ஷட்பதீ ஸ்தோத்ரம் முற்றும்.



॥ श्रीः ॥

# ॥ श्री कृष्णाष्टकम् ॥

## ஸ்ரீ கிருஷ்ணாஷ்டகம்

[ஸ்ரீ க்ருஷ்ணாஷ்டகம் எட்டு சுலோகங்கள்கொண்டது. ஒவ்வொரு சுலோகத்தின் நான்காவது பாதத்திலும், ஒரே மாதிரியாக "ஸர்வலோகநாயகனுயும், புகலிடமாயும் உள்ள கிருஷ்ணன், நான் பார்க்கும்படியாக என் கண் எதிரில் தோன்றட்டும்" என்று பிரார்த்திக்கிருர். இதில் கிருஷ்ணனை நந்தகுமாரனுகமட்டும் வர்ணிக்கவில்லை. உபநிஷத்துக்களில் கூறியபடி ஸகுண ஈசுவரனுகவும், நிர்குணமான பரப்ரஹ்மமாகவும் வர்ணிக்கிருர். ஆகையால் கோபால உருவத்துடன் கண்முன் தோன்றி ஆனந்தத்தைத் தருவதுடன், என் ஞானத்திற்கும் விஷயமாகவேண்டும். அதாவது வேதாந்த ப்ரதிபாத்யமான உம் பரதத்வத்தை நான் நன்கு அறிந்து பேரானந்தத்தை அடையவேண்டுமென்றும் வேண்டுகிருர். முதல் சுலோகத்தில் வைகுண்டவாஸியான ஸ்ரீமந் நாராயணனுக வர்ணித்துவிட்டு, அவரே ஸிருஷ்டி ஸ்திதி ஸம்ஹார கர்த்தாவான ஈசுவரன் என்று இரண்டாவது சுலோகத்தில் கூறுகிருர். மூன்ருவது சுலோகத்தில் அஷ்டாங்கயோகத்தால் ஈச்வர தர்சனம் ஏற்படுவதைக் கூறிவிட்டு, நான்காவது சுலோகத்தில் பிருஹதாரண்யக உபநிஷத்தில் கூறப்பட்டுள்ள அந்தர்யாமி ஸ்ரீ கிருஷ்ணனே என்பதையும், ஐந்தாவது சுலோகத்தில் கேனேபநிஷத்தில் தேவர்களுக்கு முன்னுல் தோன்றியதாகக் கூறப்பட்டுள்ள யக்ஷமும் கிருஷ்ணர்தான் என்பதையும் கூறுகிருர். ஆருவது சுலோகத்தில் கிருஷ்ணத்யானம், ஸ்மரணம், ஞானம் இவை இல்லாவிடில் கீழ்ப்பிறவியை அடைவான் என்பதைக் கூறி 7, 8-வது சுலோகங்களில் அவதார கார்யங்களைக் கூறுகிருர்.]

(அ) கிருஷ்ணன் நாராயணன்தான் என்பதைக்காட்டி, அவரைத் தன் கண்ணுல் பார்க்கும்படி அருளவேண்டுமென பிரார்த்திக்கிருர் :—

श्रियाश्लिष्टो विष्णुः स्थिरचरगुरुर्वेदविषयो
धियां साक्षी शुद्धो हरिरसुरहन्ताऽब्जनयनः ।

गदी शङ्खी चक्री विमलवनमाली स्थिररुचिः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥ १ ॥

ச்ரியாச்லிஷ்டோ விஷ்ணு: ஸ்திர சர குருர் வேத விஷயோ
தியாம் ஸாக்ஷீ சுத்தோ ஹரிரஸுர ஹந்தாऽப்ஜ நயன: ।
கதீ சங்கீ சக்ரீ விமல வநமாலீ ஸ்திர ருசி:
சரண்யோ லோகேசோ மம பவது க்ருஷ்ணோऽக்ஷிவிஷய: ॥

श्रिया-லக்ஷ்மிதேவியால், आश्लिष्टः-ஆலிங்கனம் செய்து கொள்ளப்பட்டவரும், विष्णुः-எங்கும் இருப்பவரும், स्थिरचरगुरुः-ஸ்தாவரமும் ஜங்கமமுமான பிராணிகளுக்கு குருவாயும் वेदविषयः-வேதத்தால் விளக்கத்தக்கவரும், धियां-புத்தி வ்ருத்திகளுக்கு, साक्षी-ஸாக்ஷியாக இருப்பவரும், शुद्धः-நிர்மலரும், हरिः-பாபங்களைப் போக்குகிறவரும், असुरहन्ता-அஸுரர்களைக் கொல்பவரும், अब्जनयनः-தாமரைபோன்ற கண்களுள்ளவரும், गदी-கதையுடன் கூடியவரும், शंखी-சங்கத்துடன் கூடியவரும், चक्री-சக்கரத்துடன் கூடியவரும் विमलवनमाली-நிர்மலமான வனமாலையுடன் கூடியவரும், स्थिररुचिः-நிலையான காந்தியுள்ளவரும், शरण्यः-புகலிடமாக இருப்பவரும், लोकेशः-எல்லா உலகங்களுக்கும் ஈசுவரனுயும் இருக்கும், कृष्णः-கிருஷ்ணன், मम-என்னுடைய, अक्षिविषयः-கண்களுக்கு கோசரராக भवतु-ஆகட்டும்.

ஸ்ரீ கிருஷ்ணன் என் கண்ணுல் பார்க்கும்படி என் எதிரில் வந்து நின்று தன் ரூபத்தை எனக்குக் காட்டியருள் செய்யவேண்டும். இவர் உலகிற்கு வஸுதேவ குமாரராகத் தோன்றியபோதிலும் இவர் ஸ்ரீமந் நாராயணன்தான் என்பதை நான் தெரிந்துகொண்டுள்ளேன். சங்கசக்ரகதா பாணியாயும் வநமாலாதரராயும் லக்ஷ்மியை மார்பில் கொண்டவரும் 'यथा कप्यासं पुण्डरीकं एवमक्षिणी' என்று சாந்தோக்ய உபநிஷத்தில் கூறியுள்ளபடி புண்டரீகாக்ஷனும் அப்போதைக்கப்போது பல அவதாரங்கள்செய்து துஷ்ட அஸுரர்களைக் கொல்வதுடன், ஸ்தாவரமாயும் ஜங்கமமாயும் உள்ள பிராணிகளுக்கு குருவாக இருந்து வழிகாட்டு

பவருமான ஸ்ரீமந் நாராயணன்தான் கிருஷ்ணன். இது மட்டுமா! உபநிஷத்துக்களால் விளக்கப்படுகின்ற ஸர்வ வியாபகமான மாயாதீதமான பரப்ரஹ்மமும் இவர்தான். எல்லோருடைய ஹிருதயத்திலுமிருந்து புத்தியில் ஏற்படும் ஞானங்கள் எல்லாவற்றையும் அதனுடன் ஸம்பந்தப்படாது அறிகின்ற ஸாக்ஷியும் இவர்தான். இங்கு தாமரையை பகவானுடைய கண்களுக்கு உபமானமாகக் கூறியுள்ள போதிலும் இரவில் தாமரைக்கு சோபை குறைவதுபோல் இவருடைய காந்தி ஒருபொழுதும் மங்குவதில்லை. அது நிலையானது. இந்தக் காந்தியால்தான் வனமாலை முதலியவைகளுக்கும் சோபை ஏற்படுகிறது. (1)

(அ) உபநிஷத்தில் கூறியுள்ள ஈசுவர லக்ஷணம் இவரிடம் இருப்பதைக் கூறுகிறார் :—

यतः सर्वं जातं वियदनिलमुख्यं जगदिदं
स्थितौ निःशेषं योऽवति निजसुखांशेन मधुहा ।
लये सर्वं स्वस्मिन्हरति कलया यस्तु स विभुः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥ २ ॥

யத: ஸர்வம் ஜாதம் வியதநில முக்யம் ஜகதிதம்
ஸ்திதௌ நிச்சேஷம் யோZவதி நிஜ ஸுகாம்சேந மதுஹா ।
லயே ஸர்வம் ஸ்வஸ்மின் ஹரதி கலயா யஸ்து ஸ விபு:
சரண்யோ லோகேசோ மம பவது க்ருஷ்ணோZக்ஷிவிஷய: ॥

यतः–எவரிடமிருந்து, वियदनिलमुख्यं–ஆகாசம், வாயு முதலான, इदं–இந்த, सर्वं जगत्–எல்லா உலகமும், जातं–உண்டாகியிருக்கிறதோ. मधुहा–மது என்ற அஸுரனைக் கொன்ற, यः–எந்த ஈசுவரன், स्थितौ–ஸ்திதி காலத்தில், निजसुखांशेन–தன் ஆனந்தாம்சத்தால், निःशेषं–எல்லாவற்றையும், अवति–காப்பாற்றுகிறாரோ, यस्तु–எவரோவெனில், कलया–தன் அம்சத்தால், लये–பிரளயகாலத்தில், स्वस्मिन्–தன்னிடத்தில், सर्वं–எல்லாவற்றையும், हरति–அடங்கும்படி செய்கிறாரோ, विभुः–வியாபகராயும், शरण्यः–ரக்ஷகராயும்,

**लोकेशः**-உலகங்களுக்கு ஈசுவரனுயும் உள்ள, **सः**-அந்த, **कृष्णः**-கிருஷ்ணன், **मम**-என்னுடைய, **अक्षिविषयः**-கண்களுக்கு விஷயமாக, **भवतु**-ஆகட்டும்.

எவரிடமிருந்து ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவி முதலான பிரபஞ்சம் முழுவதும் உண்டாகிறதோ, ஸச்சிதானந்த ஸ்வரூபமான எவர் தன்னிடமுள்ள ஆனந்தாம்சத்தால் எல்லா பிராணிகளையும் காப்பாற்றுகிருரோ, பிரளய காலத்தில் தன் அம்சத்தால் எவர் எல்லாவற்றையும் தன்னிடம் ஒடுங்கும்படி செய்கிருரோ, வியாபகனுயும் ரக்ஷகனுயும் லோகேசனுயுமுள்ள அந்த கிருஷ்ணன் என் கண் எதிரில் தோன்றட்டும். ‘**यतो वा इमानि भूतानि जायन्ते, येन जातानि जीवन्ति, यत्प्रयन्त्यभिसंविशन्ति**’ என்று தைத்திரீய உபநிஷத்திலும் ‘**जन्माद्यस्य यतः**’ என்று ப்ரஹ்மஸூத்ரத்திலும் கூறப்பட்ட ப்ரஹ்ம லக்ஷணம் இங்கு காட்டப்பட்டுள்ளது. ஸச்சிதானந்த ஸ்வரூபமான இவரே தன் ஆனந்தத்தின் ஒரு திவிலையால் எல்லாப் பிராணிகளையும் ஆனந்தமுள்ளவர்களாகச் செய்கிருர். இந்த ஆகாசம் போல் விபுவான பரமாத்மா இல்லாவிட்டால் ஒருவரும் வாழவே முடியாது.

[1] एतस्यैवानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति। [2] को ह्येवान्यात्कः प्राण्यात्। यदेष आकाश आनन्दो न स्यात्। एष ह्येवानन्दयाति। (2)

(அ) பகவத் தர்சனத்துக்கு உபாயமான யோக முறையைக் கூறுகிருர் :—

**अम्नायाभ्यादौ यमनियममुख्यैः सुकरणै-**
**र्निरुद्ध्येदं चित्तं हृदि विलयमानीय सकलम्।**
**यमीड्यं पश्यन्ति प्रवरमतयो मायिनमसौ**
**शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः॥ ३॥**

1. பிருஹதாரண்யகம், 4-3-32. 2. தைத்திரீயம்,

அஸூநாயம்யாதௌ யம நியம முக்யை: ஸுகரணை:
நிருத்த்யேதம் சித்தம் ஹ்ருதி விலயமாநீய ஸகலம் |
யமீட்யம் பச்யந்தி ப்ரவர மதயோ மாயிநமஸௌ
ஶரண்யோ லோகேஶோ மம பவது க்ருஷ்ணோऽக்ஷிவிஷய:||

आदौ-முதலில், असून्-பிராணனை, आयम्य-அடக்கி, यमनियममुख्यैः-யமம் நியமம் முதலான, सुकरणैः-சிறந்த ஸாதனங்களால், इदं-இந்த, चित्तं-மனதை, हृदि-மனதில், निरुध्य-தடுத்து, सकलं-எல்லாவற்றையும், विलयमानीय-மறையும்படி செய்து, प्रवरमतयः-சிறந்த புத்தியுள்ளவர்கள், मायिनं-மாயாவியான, ईड्यं-புகழத்தக்க, यं-எவரை, पश्यन्ति-பார்க்கிறார்களோ, असौ-அந்த, शरण्यः-ரக்ஷிகரும், लोकेशः-உலகங்களுக்கு ஈசுவரனுமான, कृष्णः-கிருஷ்ணன், मम-என்னுடைய, अक्षिविषयः-கண்களுக்கு கோசரமாக, भवतु-ஆகட்டும்.

உலகில் சிறந்த புத்திசாலிகள் மிகுந்த சிரமப்பட்டு யமம், நியமம் முதலிய உபாயங்களால் புலன்களையும் மனதையும், பிராணாயாமத்தால் பிராணனையும் அடக்கி, மனத்தை வெளியில் போகவொட்டாமல் ஹிருதயத்திலேயே நிலைநிறுத்தி, மனதில் விஷயம் ஒன்றும் தோன்றாதவாறு விருத்திநிரோதம் செய்து, ஈசுவரனைப் பார்க்கிறார்கள். இவ்வித சிரமம் ஒன்றுமில்லாமலே தங்களைச் சரணமடைந்த எனக்குத் தாங்கள் கருணையால் தங்கள் ஸ்வரூபத்தை எனக்குக் காட்டவேண்டும். (3)

(அ) பிருஹதாரண்யகத்தில் உள்ள அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் கூறியுள்ளபடி ஈசுவர ஸ்வரூபத்தை வர்ணிக்கிறார் :—

पृथिव्यां तिष्ठन्यो यमयति महीं वेद न धरा
यमित्यादौ वेदो वदति जगतामीशममलम् ।
नियन्तारं ध्येयं मुनिसुरनृणां मोक्षदमसौ
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥ ४ ॥

ப்ருதிவ்யாம் திஷ்டன் யோ யமயதி மஹீம் வேத ந தரா
யமித்யாதௌ வேதோ வததி ஜகதாமீசமமலம் |
நியந்தாரம் த்யேயம் முனி ஸுரந்ருணாம் மோக்ஷதமஸௌ
சரண்யோ லோகேசோ மம பவது க்ருஷ்ணோऽக்ஷிவிஷய: ||

**यः**-எவர், **पृथिव्यां**-பூமியில், **तिष्ठन्**-இருந்துகொண்டு, **महीं**-பூமியை, **यमयति**-அடக்கி ஆள்கிறரோ, **धरा**-பூமி, **यं**-எவரை, **न वेद**-அறியமாட்டாளோ, **इत्यादौ**-இது முதலான இடத்தில், **वेदः**-வேதம், **जगतां ईशं**-உலகங்களுக்கு நாயகனாக வும், **अमलं**-தோஷங்களற்றவராகவும், **नियन्तारं**-அடக்குபவ ராகவும், **ध्येयं**-தியானம் செய்யத் தகுந்தவராகவும், **मुनि-सुरनृणां**-முனிவர், தேவர், மனிதர் இவர்களுக்கு, **मोक्षदं**-முக்தியைத் தருபவராகவும், **वदति**-(எவரை) சொல்கிறதோ, **असौ**-அந்த, **शरण्यः**-ரக்ஷகனும், **लोकेशः**-உலகங்களுக்கு ஈசனும் இருக்கிற, **कृष्णः**-கிருஷ்ணன், **मम**-என்னுடைய, **अक्षिविषयः**-கண்ணுக்கு கோசரமாக, **भवतु**-ஆகட்டும்.

பிருஹதாரண்யக உபநிஷத்தில் அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில், ஜனகருடைய ஸபையில் உத்தாலகர் யாக்ஞவல்க்யரிடம் "அந்தர்யாமியைப்பற்றி விபரமாகச் சொல்லுங்கள்" என்று கேட்கவே யாக்ஞவல்க்யர் விஸ்தாரமாக பதில் கூறுகிறர் — 1 "எவர் பூமிக்கு உள்ளே இருக்கிறரோ, எவரை பூமி அறியமாட்டாளோ, எவருக்கு பூமியே சரீரமோ, எவர் உள்ளே இருந்துகொண்டு பூமியை அடக்கி ஆள்கிறரோ, இவர்தான் அந்தர்யாமி. நாசரஹிதர். இவரே உன்னுடைய ஆத்மா. இதுபோலவே மற்ற நான்கு பூதங்கள், ஸூரியசந்திரர்கள், நக்ஷத்ரங்கள், சரீரம், இந்திரியங்கள், மனம் இது முதலான எல்லா இடங்களிலும் எல்லா பிராணிகளிடமும் அவைகளுக்குத் தெரியாமல் உள்ளே இருந்துகொண்டு அவைகளை நன்கு தெரிந்துகொள்கிறவர். அவைகளையே சரீரமாகக் கொண்டவர், தனியாக

1. अन्तर्यामिणं ब्रूहीति यः पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरो यं पृथिवी न वेद यस्य पृथिवी शरीरं यः पृथिवीमन्तरो यमयति एष त आत्माऽन्तर्याम्यमृतः
— பிருஹதாரண்யகம் அத். 3 ப்ரா. 7

வேறு சரீரமற்றவர், அதனாலேயே நாசமற்றவர். எல்லாவற்றையும் அடக்கியாள்பவர். இவர்தான் அந்தர்யாமி. இவரே எல்லோருக்கும் ஆத்மாவாக விளங்குகிறார்." இவ்வாறு உபநிஷத்தில் கூறப்பட்டுள்ள அந்தர்யாமிதான் கிருஷ்ணன். அவரே தியானம் செய்யத் தக்கவர். ஸாத்விக ஸ்வபாவர்களான முனிவர்கள், தேவர்கள், மனிதர்கள் இவர்களுக்கு மோக்ஷத்தை அளிப்பவர். இந்த கிருஷ்ணன் என் கண் எதிரே வந்து நிற்கட்டும். (4)

(அ) கேனோபநிஷத்தில் கூறியபடி ஈசுவரனுடைய ஸ்வரூபத்தை வர்ணிக்கிறார் :—

महेन्द्रादिर्देवो जयति दितिजान्यस्य बलतो
न कस्य स्वातन्त्र्यं क्वचिदपि कृतौ यत्कृतिमृते ।
बलारातेर्गर्वं परिहरति योऽसौ विजयिनः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥ ५ ॥

மஹேந்த்ராதிர் தேவோ ஜயதி திதிஜான் யஸ்ய பலதோ
ந கஸ்ய ஸ்வாதந்த்ர்யம் க்வசிதபி க்ருதௌ யத்க்ருதிம்ருதே।
பலாராதேர் கர்வம் பரிஹரதி யோ஽ஸௌ விஜயிந:
ஶரண்யோ லோகேஶோ மம பவது க்ருஷ்ணோ஽க்ஷிவிஷய: ॥

यस्य–எவருடைய, बलतः-பலத்தால், महेन्द्रादिः–இந்திரன் முதலான, देवः–தேவர், दितिजान्–அஸுரர்களை, जयति–ஜயிக்கிறாரோ, यत्कृतिमृते–எவருடைய பிரயத்னமில்லாமல், कस्य–எவருக்கும், क्वचिदपि कृतौ–ஒரு காரியத்திலும், स्वातन्त्र्यं–ஸ்வாதந்த்ரியம், न–இல்லையோ, यः–எவர், विजयिनः–ஜயசீலரான, बलारातेः–பலாஸுரனுக்கு சத்ருவான இந்திரனின், गर्वं–அஹங்காரத்தை, परिहरति–போக்குகிறாரோ, असौ–அந்த, शरण्यः–ரக்ஷகனும், लोकेशः–உலக நாயகனுமான, कृष्णः–கிருஷ்ணன், मम–என்னுடைய, अक्षिविषयः–நேத்திர விஷயமாக, भवतु–ஆகட்டும்.

தேவர்களுக்கும் அஸுரர்களுக்கும் நடைபெற்ற யுத்தத்தில் ஒரு சமயம் தேவர்களுக்கு ஜயம் ஏற்பட்டது.

தேவர்கள் ஜயித்தது தம் சொந்த பலத்தால் அல்ல; ஈசுவர பலத்தால்தான். உலகில் ஒருவருக்கும் ஸ்வாதந்திரியம் கிடையாது. ஈசனது ஸங்கல்பத்தாலும் அருளாலும் தான் உலகில் எல்லாக் காரியமும் நடைபெறுகிறது. அவரது அருள் இல்லாவிட்டால் ஒருவரும் ஒரு காரியத்தையும் செய்யமுடியாது. இது தெரியாமல் ஈசனை மறந்து தம் தம் சொந்த பலத்தாலேயே அஸுரர்களை ஜயித்ததாக தேவர்கள் கர்வம் கொண்டனர். ஸாத்விகர்களும் தம் பக்தர்களுமான இந்திரன் முதலிய தேவர்களின் செருக்கைப் போக்க ஈசுவரன் அவர்களின் முன்னால் ஒளி வடிவமாகத் தோன்றினார். அதைக்கண்டு தேவர்கள் பயம் அடைந்தனர். இந்திரன் முதலில் அக்னியையும் பின்னர் வாயுவையும் அனுப்பினான். அவர் முன்னால் அக்னி ஒரு துரும்பைக்கூட கொளுத்தமுடியவில்லை. வாயு ஒரு துரும்பைக்கூட அசைக்க முடியவில்லை வெட்கமடைந்து கர்வம் நீங்கி அவ்விருவரும் திரும்பி வந்தனர். இந்திரன் அருகில் செல்லவே அவர் மறைந்துவிட்டார். அவரைப் பார்க்கவே முடியவில்லை. பின்னர் எல்லோரும் கர்வம் நீங்கியவர்களாய் ப்ரஹ்ம வித்யாஸ்வரூபிணியான ஹைமவதி உமாதேவியினருளால் ஈசுவரஸ்வரூபத்தை அறிந்துகொண்டார்கள். தேவர்கள் முன்தோன்றி கர்வத்தைப் போக்கிய அந்த கிருஷ்ணன் என் கண்ணுக்கு விஷயமாகி அருள்செய்யட்டும். (5)

विना यस्य ध्यानं व्रजति पशुतां सूकरमुखां
विना यस्य ज्ञानं जनिमृतिभयं याति जनता ।
विना यस्य स्मृत्या कृमिशतजनिं याति स विभुः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥ ६ ॥

விநா யஸ்ய த்யானம் வ்ரஜதி பஶுதாம் ஸூகர முகாம்
விநா யஸ்ய ஞானம் ஜனி ம்ருதி பயம் யாதி ஜநதா ।
விநா யஸ்ய ஸ்ம்ருத்யா க்ருமி ஶத ஜனிம் யாதி ஸ விபு:
ஶரண்யோ லோகேஶோ மம பவது க்ருஷ்ணோऽக்ஷிவிஷய: ॥

यस्य–எவருடைய, ध्यानं विना–தியானம் இல்லாவிடில், सूकरमुखां–பன்றி முதலான, पशुतां–மிருகப்பிறவியை, व्रजति–அடைகிருனே, यस्य–எவருடைய, ज्ञानं विना–அறிவு இல்லாவிடில், जनता–ஜநஸமூஹம், जनिमृतिभयं–பிறப்பு, சாவு இவற்ருல் பயத்தை, याति–அடைகிறதோ, यस्य–எவருடைய, स्मृत्या विना–ஸ்மரணம் இல்லாவிடில், कृमिशतजनिं–நூற்றுக் கணக்கான புழுக்களின் பிறவியை, याति–அடைகிருனே, सः–அந்த, विभुः–வியாபகனும், शरण्यः–ரக்ஷகனும், लोकेशः–உலக நாயகனுமான, कृष्णः–கிருஷ்ணன், मम–என்னுடைய, अक्षिविषयः–கண்ணுக்கு விஷயமாக, भवतु–ஆகட்டும்.

மனிதனுகப் பிறந்தவன் மறுபடியும் மனிதப் பிறவியையோ அல்லது உயர்ந்த பிறவியையோ, அல்லது மோக்ஷத்தையோ அடையவேண்டுமானுல் பகவானை ஸ்மரிக்கவேண்டும். அவரை தியானம் செய்யவேண்டும். அவரது ஸ்வரூபத்தை அறிந்துகொள்ள வேண்டும். உத்தம ஜன்மாவையடைந்தும் பகவத் ஸ்மரணத்தையும் தியானத்தையும் செய்யாமல் அவரை அறிந்துகொள்ளாமல் ஆயுளைக் கழிப்பவர்கள் மறுபடியும் மனிதனுகப் பிறப்பதில்லை. பன்றி முதலான மிருகமாகவோ, புழுக்களாகவோ பிறந்து ஜனன மரண ஸாகரத்தில் பயத்துடன் துன்புறுகிருர்கள். ஹே கிருஷ்ணு, நான் உன்னை ஸ்மரிக்கிறேன். எனக்கு உன் ஸ்வரூபத்தைக் காட்டி அருளவேண்டும். (6)

नरातङ्कोट्टङ्कः शरणशरणो भ्रान्तिहरणो
घनश्यामो वामो व्रजशिशुवयस्योऽर्जुनसखः ।
स्वयंभूर्भूतानां जनक उचिताचारसुखदः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥ ७ ॥

நராதங்கோட்டங்க: ஶரண ஶரணோ ப்ராந்தி ஹரணோ
கந ச்யாமோ வாமோ வ்ரஜ ஶிஶு வயஸ்யோऽர்ஜுந ஸக: ।
ஸ்வயம்பூர் பூதாநாம் ஜநக உசிதாசார ஸுகத:
ஶரண்யோ லோகேஶோ மம பவது க்ருஷ்ணோऽக்ஷிவிஷய: ॥

**नरातङ्कोट्टङ्कः**—மனிதர்களின் பயத்தைப் போக்குகிறவரும், **शरणशरणः**—ரக்ஷகர்களுக்கும் ரக்ஷகராயிருப்பவரும், **भ्रान्तिहरणः**—மோஹத்தைப்போக்குகின்றவரும், **घनश्यामः**—மேகம் போல் கருப்பு நிறமுள்ளவரும், **वामः**—அழகியவரும், **व्रजशिशुवयस्यः**-கோகுலத்திலுள்ள சிறுவர்களுக்கு தோழராயும், **अर्जुनसखः**—அர்ஜுனனின் நண்பரும், **स्वयंभूः**—தானாகவே ஆவிர்பவித்தவரும், **भूतानां**—பிராணிகளுக்கு, **जनकः**-தந்தையும், **उचिताचारसुखदः**—அவரவருக்குத் தக்கபடி ஆசரணைகளையும் ஸுகத்தையும் தருபவரும், **शरण्यः**-சரணம் செய்யத் தக்கவரும், **लोकेशः**—உலக நாயகனுமான, **कृष्णः**-கிருஷ்ணன் **मम**—என்னுடைய, **अक्षिविषयः**-கண்ணுக்கு விஷயமாக, **भवतु**-ஆகட்டும்.

கிருஷ்ணர் மனிதர்களின் எல்லா பயங்களையும் போக்குபவர். உலகில் ரக்ஷகர்களான அரசர் முதலானவர்களுக்கும் ரக்ஷகராக இருப்பவர். மோஹத்தைத் தொலைப்பவர். மேகச்யாமளர், ஸுந்தரர், கோபச் சிறுவர்களுக்குத் தோழர். பார்த்தனுக்கு நண்பர். பிறப்பு இல்லாதவர், எல்லா பிராணிகளுக்கும் தந்தை, அவரவர் கர்மானுஸாரமாக கார்யங்களைச் செய்வித்து ஸுகத்தைத் தருபவர் லோகநாயகன். இவர் என் கண்முன் தோன்றட்டும். (7)

यदा धर्मग्लानिर्भवति जगतां क्षोभकरणी
तदा लोकस्वामी प्रकटितवपुः सेतुधृदजः ।
सतां धाता स्वच्छो निगमगणगीतो व्रजपतिः
शरण्यो लोकेशो मम भवतु कृष्णोऽक्षिविषयः ॥ ८ ॥

யதா தர்மக்லாநிர் பவதி ஜகதாம் க்ஷோப கரணீ
ததா லோக ஸ்வாமீ ப்ரகடித வபு: ஸேதுத்ருதஜ: ।
ஸதாம் தாதா ஸ்வச்சோ நிகமகண கீதோ வ்ரஜபதி:
ஶரண்யோ லோகேஶோ மம பவது க்ருஷ்ணோ(அ)க்ஷிவிஷய: ॥

**यदा**—எப்பொழுது, **जगतां**—உலகங்களுக்கு, **क्षोभकरणी**-கலக்கத்தைச் செய்கின்ற, **धर्मग्लानिः**—தர்மத்திற்கு வாட்டம்,

**भवति**-ஏற்படுகிறதோ, **तदा**-அப்பொழுது, **प्रकटितवपुः**-சரீரத்தை வெளிக்காட்டுகின்றவரும், **अजः**-(உண்மையில்) பிறப்பற்றவரும், **सेतुधृत्**-உலக நியதிகளைத் தாங்குகின்றவரும், **लोकस्वामी**-உலகங்களுக்கு யஜமானனும், **सतां धाता**-நல்லோர்களை போஷிக்கின்றவரும், **स्वच्छः**-களங்கமற்றவரும் **निगमगणगीतः**-வேத ஸமூஹங்களால் போற்றப்பட்டவரும், **व्रजपतिः**-கோகுலத்திற்கு யஜமானனும், **शरण्यः**-ரக்ஷகனும், **लोकेशः**-உலக நாயகனுமான, **कृष्णः**-கிருஷ்ணன், **मम**-என்னுடைய, **अक्षिविषयः**-கண்ணுக்குத் தெரிபவராக, **भवतु**-ஆகட்டும்.

தர்மம் குறைந்து அதர்மம் மேலிடும்பொழுது உலக நியதிகளெல்லாம் மாறி உலகமெங்கும் கலக்கம் ஏற்பட்டு ஸாதுக்கள் துன்புறுகின்றனர். அப்பொழுது பகவான் பிறப்பற்றவராயிருந்தாலும் உலகைக் காக்க மாயையால் சரீரம் தாங்கி அவதாரம் எடுத்து அணை தண்ணீரைத் தடுத்து நிறுத்துவதுபோல தன்னால் ஏற்படுத்தப்பட்ட வியவஸ்தைகளை முன்போலவே நிலை நிறுத்தி துஷ்டர்களை சிக்ஷித்து ஸாதுக்களைக் காப்பாற்றி தர்மம் செழித்தோங்கும் படி செய்கிறார். இவர் எல்லா உலகங்களுக்கும் யஜமானன். உலகங்களை அடக்கி ஆள்பவரும் இவரே. இவரையே எல்லா வேதங்களும் போற்றித் துதிக்கின்றன. கோகுலநாதனும் நிர்மலனும் ரக்ஷகனுமான அந்த கிருஷ்ணன் என் கண் முன்னால் தோன்றட்டும். நான் அவரை தர்சித்து அவரது அருளால் ஸத்கதி அடைவேன். (8)

ஸ்ரீ கிருஷ்ணாஷ்டகம் முற்றும்.



॥ श्रीः ॥

# ॥ श्लोकानुक्रमणिका ॥